# ஸ்ரீ ராமாநுஜன் 358



ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
மஹாவித்வான் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி

தொகுதி 30 | பிங்கள ௵ பங்குனி ௴ 29—3—1978 | பகுதி—10

— பங்குனி விசாக மலர் —

## அடியேன் செய்யும் அபூர்வ விஜ்ஞாபனம்.

### 1. எம்பெருமானுக்கு எது அஸஹ்யம்?
### 2. ஆளவந்தார்க்கு எது அஸஹ்யம்? 3. அடியேனுக்கு எது அஸஹ்யம்?



**1** *மஹாத்மபிர் மாம் அவலோக்யதாம் நய க்ஷணேபி தே யத்விரஹோதி துஸ்ஸஹ:* என்று ஆளவந்தார் அருளிச் செய்தபடி மஹாத்மாக்களின் விச்லேஷம் எம்பெருமானுக்கு அஸஹ்யம். **2** *தவ சேஷத்வவிபவாத் பஹிர்ப்பூதம் நாத! க்ஷணமபி நஸஹே* என்றருளிய ஆளவந்தார்க்கு சேஷத்வபஹிர்ப்பூத ஜ்ஞாநாநந்தமயன் அஸஹ்யன். **3** அடியேனுக்கு எது அஸஹ்யமென்றால், ப்ரமாணவசனங்களின் உண்மைப் பொருள்களை மறைத்து அபார்த்தங்களை வெளியிடுமவர்களின் எழுத்துக்கள் அஸஹ்யம். அத்யந்தம் அஸஹ்யம். உடனே அவற்றுக்குக் கண்டனமெழுதியே ஆறுதல் அடைவேன். ப்ரக்ருதம் கேண்மின். ஸ்ரீரங்கத்தில் வாழும் உ.வே. வித்வான் மதுராந்தகம் வீரராகவா சாரியர்ஸ்வாமி திருக்கச்சி நம்பிகளின் வைபவம் எழுதுவதாக ஒரு வியாஜமிட்டுச் சில அபார்த்தங்களை ஸ்ரீரங்கநாத பாதுகா பத்ரிகையில் வெளியிட்டிருக்கின்றார் 25-3-78 இன்றுதான் அஃது அடியேன் கண்ணில்பட்டது *யாதுசதாவிநாசம் தத் ஸத்யம்* என்றபடியாகவேணுமது. இதோ ஆகிறது. ... ... ●

# திருக்கச்சிநம்பி வைபவ பரிஷ்காரம்

*ந சூத்ரா பகவத்பக்தா விப்ரா பாகவதா: ஸ்ம்ருதா:, ஸர்வவர்ணேஷு தே சூத்ரா யே ஹ்யபக்தா ஜநார்தநே *ச்வசோபி மஹீபால! விஷ்ணு பக்தோ த்விஜாதிக:, விஷ்ணுபக்தி விஹீநஸ் து யதிச்ச ச்வபசாதம:* என்பது முதலான பல ப்ரமாணங்கள் வர்ணாச்ரமங்களில் சரக்கறுத்து பகவத் ஸம்பந்தத்தையே உத்கர்ஷ ஹேதுவாகச் சொல்லியுள்ளன. *பக்திரஷ்டவிதா ஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சேபி வர்த்ததே, தஸ்மை தேயம் ததோ க்ராஹ்யம் ஸ ச பூஜ்யோ யதாஹ்யஹம்* என்கிற பகவத் வசனத்தைத் தொண்டரடிப் பொடியாழ்வார் *இழிகுலத்தவர்களேலும் எம்மடியார்களாகில் தொழுமினீர் கொடுமின் கொண்மினென்று நின்னோடு மொக்க வழிபட வருளினாய்* என்கிற பாசுரத்தாலே நிருபித்தருளினார். இங்ஙனேயுள்ள பல்லாயிரம் பிரமாணங்களினால் உத்க்ருஷ்ட நிக்ருஷ்ட ஜன்மம் இன்னதென்று நிஷ்கர்ஷிக்கப்பட்டிருக்குமதை ஸ்ரீவசனபூஷணம் ஆசார்ய ஹ்ருதயம் முதலான திவ்ய க்ரந்தங்களில் நம் ஆசாரியர்கள் பரக்க அருளிச் செய்துள்ளார்கள். ஆழ்வார்களில் சிலர் தாழ்ந்த வருணங்களில் அவதரித்திருப்பதனால் அவர்கள் பக்கலில் ஜாதிப்ரயுக்தமான நிகர்ஷம் பாராட்டலாகாது என்பதற்காகவே இவ்விஷயம் ரஹஸ்ய நூல்களில் நிருபிக்கப்பட்டுள்ளது. போலியான பக்தியை அபிநயித்து பாகவதனென்றும் பக்தனென்றும் பேர் சுமக்கின்ற இக்காலத்தவர்களைப்பற்றி இந்த உத்க்ருஷ்டஜன்ம ப்ரபாவ விஷயம் ஸர்வாத்மநா அப்ரஸக்தம். *கிமப்யத்ராபிஜாயந்தே யோகிநஸ் ஸர்வயோநிஷு, ப்ரத்யக்ஷிதாத்மநாதாநாம் நைஷாம் சிந்த்யம் குலாதிகம்* என்கிற பிரமாணத்திற்கு இலக்கான மஹநீயர்களைப் பற்றியே உத்க்ருஷ்ட ஜந்மநிருபணம் ரஹஸ்ய க்ரந்தங்களில் அமைந்தது.

அஸங்குசித ஹ்ருதயர்களான ஆசாரியர்கள் சாஸ்த்ரார்த்தங்களை உள்ளபடி நிருபித்தருளக் கடமைப்பட்டவர்களாதலால் இந்த நிருபணங்களைப் பண்ணிப் போந்தார்கள். நிருபணஸாரம் கேண்மின்;—

உலகத்தில் அவரவர்கள் நமக்குப் பெருமையுண்டென்று நினைப்பதற்குப் பல ஹேதுக்களுள்ளன. உயர்ந்த ஜாதியிலே பிறந்திருக்கின்றோமென்று சிலர் பெருமை கருதுவர். உயர்ந்த ஆச்ரமத்தில் இருக்கின்றோமென்று [ஸம்ந்யாஸாச்ரமம் பூண்டு யதியாயிருக்கின்றோமென்று] சிலர் பெருமை பாராட்டுவர். தர்க்க வ்யாகரண மீமாம்ஸைகள் முதலான சாஸ்த்ரங்களில் விசேஷபாண்டித்யம் படைத்திருக்கிறோமென்று சிலர் பெருமை கொள்வர். வேதவிதிகளைத் தவறாது ஸ்நாந ஸந்த்யாவந்தனம் முதலான நித்யநைமித்திக ஆசாரங்களில் வழுவாதிருக்கின்றோமென்று சிலர் தம்மைப் பெரியோராக நினைத்திருப்பர்கள். இப்படி அவரவர்கள் தாங்கள் நினைத்திருப்பதேயன்றி இக்காரணங்கள் பற்றி அவர்களைப் பெருமைவாய்ந்தவராக இதரர்கள் பலரும் நினைத்திருப்பதுமுண்டு; சொல்லுவதுமுண்டு. எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருத்தலே ஆத்மாவுக்கு நிருபகமென்று நிஷ்கர்ஷித்து அறிதற்குத் தகுதியாக த்யாஜ்யோபாதேயங்களைப் பகுத்துணரத்தக்க ஞானமில்லாதவர்களே இங்ஙனம் நினைத்திருப்பர்களென்றும், அப்படிப்பட்ட ஞானமுள்ளவர்கள் கீழ்ச்சொன்ன காரணங்களினால் மாத்

திரம் ஒரு பெருமை கருதார்கள். பகவத் ஸம்பந்தமொன்றைக்கொண்டே பெருமையை நிஷ்கர்ஷிப்பர்களென்றும் நம் ஆசாரியர்கள் அறுதியிட்டுள்ளார்கள்.

இவ்விஷயங்களுக்கு அடைவே பிரமாணங்கள் காட்டப்படுகின்றன; [*சதுர் வேததரோ விப்ரோ வாஸுதேவம் ந விந்ததி, வேதபாரபராக்ராந்தஸ் ஸ வை ப்ராஹ்மண கர்தப:*] நான்கு வேதங்களையும் அதிகரித்துவைத்தே வேதமுழுப்பொருளாகிய எம்பெருமானை அறியப்பெறாதவன் குங்குமஞ் சுமந்த கழுதைபோலே தான் சுமந்து கொண்டு திரிகிற வேதத்தின் பரிமளமறியாத பிராமண க்கழுதையென்று சொல்லப் பட்டிருக்கின்றது. ஆகவே வெறும் பிராமண ஜாதிப் பிறப்பைக் கொண்டே பெருமை பாராட்டலாகாதென்பது விளங்கிற்று *ச்வபசோபி மஹீபால! விஷ்ணுபக்தோ த்விஜாதிக:, விஷ்ணுபக்தி விஹீநஸ் து யதிச் ச ச்வபசாதம: *சண்டாள யோனி யிற் பிறந்தானாயினும் விஷ்ணு பக்தியுடையனா யிருந்தால் அவன் கேவல ப்ராஹ்மணனிற் காட்டிலும் சிறந்தவன்; உத்தமாச்ரமியானாலும் எம்பெரு மானிடத்தில் பக்தியில்லாதவன் சண்டாளனிற் காட்டிலும் தண்ணியன் என்று இதனால் சொல்லிற்று. ஆகவே வெறும் ஸம்ந்யாஸாச்ரமத்தைக் கொண்டே பெருமை கருதலாகாதென்று விளங்கிற்று. *தத் கர்ம யந்ந பந்தாய ஸா வித்யா யா விமுக்தயே, ஆயாஸாயாபரம் கர்ம வித்யாந்யா சில்பநைபுணம்* மோக்ஷார்த்தமாக உபயோகப்படும் வித்யை எதுவோ அதுவே வித்யையாகும்; அப்படியல்லாதது செருப் புக்குத்தக் கற்ற கல்வி போன்றதேயாகும் என்று இதனால் சொல்லிற்று. ஆகவே தர்க்கபாண்டித்யத்தைக்கொண்டே பெருமை பாவிக்கலாகாதென்பது விளங்கிற்று.

ஜாதியினால் ஏற்றமும், அச்ரமத்தினால் உயர்வும், கல்வியினால் சிறப்பும், ஒழுக்கத்தினால் உத்கர்ஷமும் பக்திப் பெருஞ் செல்வமில்லாதபோது சிறிதும் பயன் படாதென்பது ஸகலசாஸ்த்ர ஸாரமானது. இவ்வர்த்த விசேஷங்களை ஸ்ரீவசநபூஷ ணமும் ஆசார்ய ஹ்ருதயமும் பரக்கப்பேசியுள்ளன. இவ்வர்த்த விஷயமான விவா தம் ஸம்பிரதாயத்தில் ஒரு பெரிய விஷயமாக வுள்ளது. சாஸ்த்ரார்த்த தத்வமிருக்கும் படியை நாம் கீழே ப்ரமாண பூர்வகமாகக் காட்டியாயிற்று. இந்த ப்ரமாணங்களில் எவர்க்கும் விப்ரதிபத்தி இராது. ஆனாலும் வர்ணாச்ரம வ்யவஸ்தையை மீறி இதர வர்ணத்தவர்களை உபசரிப்பதோ கௌரவிப்பதோ ஏலாது என்னுமபிஸந்தியினால் இவ்வர்த்தத்தில்வாத விவாதங்களைப் பிறர் செய்கிறார்கள். அவற்றை அநுவாதஞ் செய்து மறுப்பெழுத நாம் இங்கு விரும்புகின்றிலோம். ஏனென்னில், இது அனுஷ்டா னத்திற்கு உபயோகப்படாத விஷயமாக இரா நின்றது. இக்காலத்தில் இதர வருணத்த வர்கள் யோக்யதை மிகுந்தவர்களாக இருந்தாலும் அவர்கள் திறத்திலே நாம்எங்ஙனம் நடந்து கொள்ளுகிறோமென்பது அனைவர்க்கும் அபரோக்ஷம். இவ்வர்த்த விசேஷங் களைச் சேமிக்கின்ற நாமும், இவற்றை க்ஷேபிக்கின்ற பிறரும் நடத்தையில் ஒரு வாசி யின்றிக்கே யிருப்பது ப்ரத்யக்ஷ ஸித்தம் ஆனால் இவ்வர்த்த விசேஷங்களை நம் பூரு வர்கள் அவசியமாக எழுதி வைத்தது எதற்காக வென்றால், அவர்களுடைய காலத் திலும் பண்டைக் காலத்திலும் இருந்த லோகாதீத பரம விலக்ஷண பரமபக்த சிகாமணி களைப் பற்றியே முக்கியமாக அருளிச் செய்ததாகும்.

இக்காலத்திலும் அப்படிப்பட்ட மஹா பாகவ தோத்தமர்கள் *க்வசித் க்வசித்* என்றபடியே ஓரோவிடங்களிலே தோன்றுகை அஸம்பாவித மன்று. அன்னவர் திறத்திலே நாம் ப்ரதிபத்தி குன்றுமேயிருக்கவேணு மென்பதை சிக்ஷிப்பதும் பூருவர்களின் கருத்தாகும். ஆகவே ஈண்டு இதில் விசேஷித்து விளக்கவேண்டிய அவசியமில்லையெனினும், சாஸ்த்ரார்த்த நிஷ்கர்ஷ ஸரணியில் ஒரு விஷயம் மாத்திரம் இங்கு நன்கு தெளிவிக்க வேண்டியதாகவுள்ளது. அவ்விஷயம் யாதெனில்; இந்த ஜந்மோத்கர்ஷ விசாரத்தில், ஜாதி நசிக்கு மென்று நம் ஆசார்யர்கள் அருளிச் செய்து போந்தார்கள். "க்ஷத்ரியனான விச்வாமித்ரன் ப்ரஹ்மரிஷியானான்" இத்யாதி ஸ்ரீஸூக்திகளும் ஸ்ரீவசந பூஷண திவ்ய சாஸ்த்ரத்தில் விளங்குமவை. இவற்றுக்கு மறுப்பாக ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ப்ரபாவவ்யவஸ்தாதிகாரத்தில் சில எழுதியுள்ளதனால் அவை எவ்வளவு பொருந்துமென்பது இங்குச் சிறிது விமர்சிக்கப் புகுகின்றது. *"சருவ்யத்யாஸாதிகளான சில விசேஷ நிதாநங்களாலே வருகிற விச்வாமித்ராதிகளுடைய நிலை வேறு சிலர்க்குக் கூடுமென்கை வசந விருத்தம்" என்பது ரஹஸ்யத்ரயஸாரத்திலுள்ளது. இங்குத் தெளிமின். ஸ்ரீராமாயணத்தில் பாலகாண்டத்தில் ஐம்பத்தாறும் ஸர்க்கத்திலே *க்ஷத்ரபந்தோ! ஸ்திதோஸ்ம்யேஷ யத் பலம் தத் விதர்சய, நாசயாம்யத்ய தே தர்ப்பம் சஸ்த்ரஸ்ய தவ காதிஜ!* என்றும் *க்வச தே க்ஷத்ரியபலம்* என்றும் *பச்ய ப்ரஹ்மபலம் திவ்யம் மம க்ஷத்ரிய பாம்ஸந!* என்றுமிப்படி பல விடங்களிலும் ஸ்ரீ வஸிஷ்ட பகவான் விச்வாமித்ரனை க்ஷத்ரியனாகவே சொல்லிப் போந்தான். விச்வாமித்ரன் தானும் *திக் பலம் க்ஷத்ரிய பலம் ப்ரஹ்மதேஜோ பலம் பலம்* என்று தன்னை க்ஷத்ரியனாகவே சொல்லிக்கொண்டான். அன்றியும் *தபோ மஹத் ஸமாஸ்தாஸ்யே யத்வை ப்ரஹ்மத்வகாரணம்*என்று ப்ராஹ்மண்யப்ராப்திக்கு உறுப்பாகத் தவம் புரியப் போகிறேனென்று சொல்லிக்கொண்டு தபஸ்ஸிலே ப்ரவர்த்திக்கையாலே அதுக்கு முன்னே சருவ்யத்யாஸாதி நிபந்தநமான ப்ராஹ்மண்யம் அவனுக்குண்டாயிருந்ததென்கை ஸ்ரீராமாயணத்தோடு சேருவது அரிது.

ஸஹஸ்ரநாம பாஷ்யமருளிச் செய்யாநின்ற பட்டரும் உபோத்காதத்திலே *ஸ்வவசநேந க்ஷத்ரியம் விச்வாமித்ரம் ப்ராஹ்மணீக்ருதவதோ பகவதோ வஸிஷ்டஸ்ய* என்று க்ஷத்ரியனான விச்வாமித்ரனை ஸ்வவசனத்தாலே ப்ரஹ்மரிஷியாக்கினதை யன்றோ வஸிஷ்ட பகவானுக்கு ஏற்றமாக அருளிச்செய்தது. இங்ஙனன்றிக்கே விச்வாமித்ரனுக்கு ப்ராஹ்மண்யம் ஜந்மஸித்தமாயிருந்தால் பட்டர் இப்படியருளிச் செய்யக் கூடாதே. தபோமூலகமான வஸிஷ்ட வாக்யத்தாலே ப்ராஹ்மண்யம் இடையில் வந்தது என்று ஸ்ரீராமாயணத்தில் தேறிநின்ற பொருளையன்றோ பட்டர் இங்ஙனே அநுவதித்தருளிச் செய்தது.

இங்கு முக்கியமாகக் குறிக்கொள்ளத் தக்கதொரு ப்ரமாணமுண்டு *அந்ருஷ்யாநந்தர்யே பிதாதிப்யோஞ்* (4-1-104) என்கிற வியாகரண ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் *அந்ருஷ்யாநந்தர்ய இத்யுச்யதே; தத்ரேதம் ந ஸித்த்யதி—கௌசிகோ விச்வாமித்ர இதி-கிம் காரணம்? விச்வாமித்ரஸ் தபஸ் தேபே நாந்ருஷிஸ் ஸ்யாமிதி. தத்ரபவாந் ருஷிஸ்ஸம்பந்ந: ஸ புநஸ் தபஸ் தேபே—நாந்ருஷே: புத்ரஸ் ஸ்யாமிதி. தத்ரபவாந் காதிரபி ருஷிஸ்ஸம்பந்ந:. ஸ புநஸ் தபஸ் தேபே நாந்ருஷே: பௌத்ரஸ் ஸ்யாமிதி; தத்ரபவாந் குசிகோऽபி ருஷிஸ் ஸம்பந்ந:* என்று விச்வாமித்ரன் தன் தவ

வலிமையினுல் தானும் தன் பிதாவும் தன் பிதாமஹனும் ரிஷித்வத்தை யடைந்தா னென்று ஸுஸ்பஷ்டமாகப் பதஞ்சலி முனிவர் பணித்தார். காதிக்கும் குசிகர்க்கும் சருவ்யத்யாஸமானதுண்டோ?

இனி ஸ்ரீவிஷ்ணுபுராண வசனங்களையும் விமர்சிப்போம். அதில் (4—2—74) *அத வநாதாகத்ய ஸத்யவதீம்ருஷிரபச்யத்; அதிபாபே! கிமிதமகார்யம் பவத்யா க்ருதம்? அதிரௌத்ரம் தே வபுர் லக்ஷ்யதே நூநம் த்வயா த்வந்மாத்ருஸாத்க்ருதச் சருருபபு (யு) க்த: ந யுக்தமேதத் மயா ஹி தத்ர சரௌ ஸகலைச்வர்ய வீர்ய சௌர்ய பல ஸம்பதாரோபிதா! த்வதீய சராவபி அகிலசாந்தி ஜ்ஞானதிதிக்ஷாதி ப்ராஹ்மண குண ஸம்பத்; தச்ச விபரீதம் குர்வத்யாஸ்தவ அதிரௌத்ராஸ்த்ர தாரணபாலன நிஷ்ட: க்ஷத்ரியாசார: புத்ரோ பவிஷ்யதி, தஸ்யாச்ச உபசமருசி: ப்ராஹ்மணாசார இதி* என்றுள்ளது. இதனுல் சருக்களுக்கு சௌர்யாதி குணாதிசயப்ரயோஜகத்வம் சொல்லிற்றித்தனையல்லது ப்ராஹ்மண்யாதிஜாதிப்ரயோஜகத்வம் சொல்லிற்றில்லையே. வீர்ய சௌர்ய பல ஸம்பதாரோபிதா என்றும் ப்ராஹ்மணகுண ஸம்பதாரோபிதா என்றுமன்றோ சொல்லிற்று. *க்ஷத்ரியாசார: புத்ரோ பவிஷ்யதி, ப்ராஹ்மணாசார:* என்றதே யொழிய *க்ஷத்ரிய: புத்ரோ பவிஷ்யதி, ப்ராஹ்மண: புத்ர:* என்றதில்லையே. ஆகவே சருவ்யத்யாஸம் ப்ராஹ்மண்யாதிஜாதிப்ரயோஜகமன்று. அன்று, அன்று.

இன்னமும், விச்வாமித்ரனுக்கு சருவ்யத்யாஸத்தாலே ப்ராஹ்மண்யம் முன்பே உண்டாயிருந்ததாகில் அவனுக்கு க்ஷத்ரிய கல்பத்தாலே முன்பு பண்ணின உபநயநாதிகள் சாஸ்த்ரீயமாகாமற் போகும். மேலும் இந்த சருவ்யத்யாஸத்தாலே பரசுராமனுக்கு க்ஷத்ரியத்வம் வரவேண்டுமாகையாலே அவனுக்கு ப்ராஹ்மண்யம் இல்லாமேபோம். ப்ராஹ்மண கல்பத்தாலே அவனுக்குப் பண்ணின உபநயநாதிகளும் அசாஸ்த்ரீயமாகும்.

இவற்றையெல்லாம் திருவுள்ளம்பற்றியே மணவாளமாமுனிகள் ஸ்ரீவசனபூஷண வியாக்கியானத்திலே—*க்ஷத்ரிய குலோத்பன்னன விச்வாமித்ரன் தஜ்ஜன்மத்திலே தான் பண்ணின தபோ விசேஷமடியாக வஸிஷ்ட வாக்யத்தாலே க்ஷத்ரியத்வம் பின்னாட்டாதபடி ப்ரஹ்ம ரிஷியாய் விட்டானிறே* என்றருளிச் செய்தார்.

தேவதாதிகரண ச்ருதப்ரகாசிகையிலே *பச்சாத் விச்வாமித்ரப்ரப்ருதீநாம் ச ப்ராஹ்மண்யாத்யபாவ ப்ரஸங்காத்* என்றுள்ளது. இதனுல் விச்வாமித்ராதிகளுடைய ப்ராஹ்மண்யாதிகள் பிறப்பே பிடித்தன்றிக்கே பின்பு வந்ததாக நிஸ்ஸந்தேஹமாய்க் காட்டப்பட்டது. இது இப்படியிருக்க. வீதஹவ்ய வ்ருத்தாந்த மொன்றுண்டு. அதாவது, வீதஹவ்யனென்பானொரு க்ஷத்ரியன் பகைவர்க்கு அஞ்சியோடிச் சென்று பரத்வாஜர் முதலிய மஹர்ஷிகளின் திரளிலே புக்கவளவிலே, அந்தப் பகைவர்கள் இந்தத் திரளருகே வந்து இங்கு க்ஷத்ரியனுளனோ? என்று கேட்டவாறே, அந்த மஹர்ஷிகள் சரணாகதனை சத்துருக்கள் கையிலே காட்டிக்கொடுக்கவொண்ணாதென்று "இங்குள்ளாரெல்லாரும் ப்ரஹ்மர்ஷிகளே" என்று சொல்லிவிட, அதனாலே வீதஹவ்யனுக்கு க்ஷத்ரியத்வம் கழிந்து ப்ராஹ்மண்யம் ப்ராப்தமாயிற்றென்று மஹாபாரதாதி ப்ரஸித்தம்.

இக்கதையை ரஹஸ்ய த்ரயஸார வியாக்கியானத்தில் [ப்ரபாவ வ்யவஸ்தாதிகாரத்தில் ஸாரவிவரணியில்] எழுதியுமுள்ளார்கள். இப்படி அல்ப சக்திகர்களான ரிஷிகளின் வாக்யத்தாலேயாம்போது, அதிகார ஸம்பத்து வாய்த்த அடியார்கள் திறமாக *நசூத்ரா பகவத்பக்தா: விப்ரா பாகவதாஸ் ஸ்ம்ருதா:* என்றாற்போலே ஸங்கல்பித்தருளினால் அங்ஙனேயாவதற்கு ஒர் இடையூறுண்டோ? *பகவத்பக்தி தீப்தாக்நி தக்த துர்ஜாதி கில்பிஷ:* என்ற ப்ரமாண கதியும் காண்க. ஜாதி நசிக்கமாட்டாதென்ற தேசிகர்தாமே *நமஸ் தஸ்மை கஸ்மைசந பவது* என்கிற ச்லோகத்திலே *சாபாயுத வதூத்ருஷத்தா துர்ஜாத ப்ரசமன பதாம்போஜ ரஜஸே* என்றும் *சிலாதேஸ் ஸ்த்ரீத்வாதிர் விபரிணதி ரஸ்த்வத்புத மிதம், ததோப்யேதச்சித்ரம் யதுத தஹனஸ் யைவ ஹிமதா. என்றும் பணித்திருக்கக் காணா நின்றோம்.

இனி அடுத்த விஷயம். "பெரியவுடையார்க்குப் பெருமாள் ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரம் பண்ணியருளினார்" என்று ஸ்ரீவசநபூஷணப் பாசுரம். இங்கு விவக்ஷிதமென்னவென்றால், லோகமர்யாதாஸ்தாபநார்த்தமாக அவதரித்துப் பித்ருவசந பரிபாலநாதிகளாலே ஸாமாந்ய தர்ம ஸ்தாபந சீலராயிருப்பாரான பெருமாள் பரமபக்தரான ஜடாயுவுக்கு ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரத்தைத் தாமே பண்ணியருளினாரென்று சொன்ன முகத்தால், ஜன்மாதிகளால் சிறந்தவர்கள் அவற்றால் குறைந்திருக்கும் விலக்ஷண பாகவத விஷயத்தில் புத்ரக்ருத்ய நுஷ்டிக்கலா மென்பது காட்டப்பட்டது. இதை யடியொற்றியே மாறனேரி நம்பிக்குப் பெரிய நம்பி சரமக்ருத்யம் அநுஷ்டித்தவாறும் மேலே அருளிச் செய்யப்பட்டுள்ளது "தர்ம புத்ரர் அசரீரி வாக்யத்தையும் ஜ்ஞாநாதிக்யத்தையுங்கொண்டு ஸ்ரீ விதுரரை ப்ரஹ்ம மேதத்தாலே ஸம்ஸ்கரித்தார்" என்றும் அருளிச் செய்யப்பட்டுளது. இவ்விடங்களுக்கு மறுப்பெழுதாநின்ற தேசிகர் *தூஷ்ணீம் அநுஷ்டிதமாதல் வ்யக்தி விசேஷநியத மாதலாமித்தனை* என்று (ரஹஸ்யத்ரயஸார ப்ரபாவவ்யவஸ்தாதிகாரத்தில்) வரைந்தார். ஜடாயு ஸம்ஸ்காரத்தைப்பற்றி ஸ்ரீ ராமாயணத்திற் பேசும் பிரகரணத்தில் *யத்து ப்ரேதஸ்ய மர்த்யஸ்ய கதயந்தி த்விஜாதய: தத் ஸ்வர்ககமனம் தஸ்ய பித்ர்யம் ராமோ ஜஜாப ஹ' (ஆர. 98-34) என்று பெருமாள் மந்த்ரஜபம் பண்ணினபடியை வால்மீகி முனிவர்தாமே ஸுஸ்பஷ்டமாகச் சொல்லி வைக்கையாலே அங்கே தூஷ்ணீ மநுஷ்டாநவாதம் செல்லாது.

இனி, தர்மபுத்ரர் விதுரரை ஸம்ஸ்கரித்த விடத்திலாவது தூஷ்ணீ மநுஷ்டாநவாதம் செல்லுமா? என்று பார்ப்போம். விதுரரை ஸம்ஸ்கரிக்க வேண்டிவந்தளவில், அவருடைய ஜாதியைப் பார்ப்பதும் ஞானமிகுதியைப் பார்ப்பதுமாய் என் செய்வதென்று தரும புத்ரர் வியாகுலப் படுகிறபடியை மஹாபாரதம் சொல்லுகிற விடத்தில் *தர்மராஜஸ்து தத்ரைநம் ஸஞ்சிஷ்காரயிஷுஸ் ததா தக்துகாமோ2பவத்வித்வாந் என்று சொல்லிற்று. இதில் ததா என்றது சகாரார்த்தக மாகையாலே ஸஞ்சிஷ்கார யிஷுச்சாபவத்* என்றதாகிறது ஞானமிகுதிக்கீடாக யதாவத்தான ஸம்ஸ்காரம் பண்ணலாமா? என்று கலங்கி நின்றானென்றபடி.

அதற்குமேல் என்னாயிற் றென்னில்; *[அதாகாசே வசோப்ரவீத் போபோ ராஜந்! ந தக்தவ்ய மேதத் விதுரஸம் ஜ்ஞகம் களேபர மிஹைதத்தே நைஷ தர்மஸ் ஸநாதன: லோக வைலக்ஷண்யே நாம பவிஷ்யத்யஸ்ய பார்த்திவ! யதிதர்மமவாப்தோ

ஸௌ நசோச பரதர்ஷப*] உடனே ஒரு ஆகாசவாணி உண்டாயிற்றும். அது சொன்னபடி யென்னெனில் [ஏதந் ந தக்தவ்யம்] *தூஷ்ணீம் ந தக்தவ்ய மிதி யாவத்* இந்தத் திருமேனியை தூஷ்ணீம் தஹநம் பண்ணத்தகாது. [ஸநாதன ஏஷ தர்ம: தே லோக வைலக்ஷண்யே ந பவிஷ்யதி] ப்ராசீநாசாரஸித்தமாய் தூஷ்ணீம் தஹநமன்றிக்கே ஸம்ஸ்கரிப்பதாகிற இந்த தர்மமானது உனக்கு சாஸ்த்ர விபரீதமாக மாட்டாதென்றபடி. இதுதனக்குக் காரணம் சொல்லுகிறது மேல் [யதிதர்ம மவாப்தோ ஸௌ] இவர் யதியைப்போலே ப்ரஹ்மமேதஸம்ஸ்காரார்ஹரேயொழிய தூஷ்ணீம் தஹிக்கத்தக்கவரல்லர் என்றபடி. [ந சோச] தூஷ்ணீம் தஹித்து விடுவதோ? ஸம்ஸ்கரிக்கக்கடவதோ வென்று கலங்கி சோகியாதே கொள் என்றபடி.

இங்கு [அஸௌ யதிதர்மம் அவாப்த:] என்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கையாலே *புத்ரோ க்ருஹஸ்த: சுத்தோ ஜத யதேஸ் ஸம்ஸ்கார மாசரேத்* என்று தொடங்கி விதித்த ப்ரஹ்மமேதேந தாஹஸம்ஸ்காரம் இவர்க்குச் செய்ய விதிக்கப்பட்ட தென்றதாயிற்று.

*யதிதர்மம் அவாப்தோஸௌ* என்று, வேறு வ்யக்திகளிடத்திலும் ஸம்பவிக்கக்கூடியதான தர்ம விசேஷத்தை ப்ரஹ்மமேத ஸம்ஸ்கார்யத்வ ப்ரயோஜகமாகச் சொல்லுகையாலே இத்தை 'வ்யக்தி விசேஷ நியதம்' என்னப் போகாது. யதிகளுக்கு தூஷ்ணீம் [அமந்த்ரகமாக] ஸம்ஸ்காரம் கண்டதில்லை. மந்த்ராபவாத ப்ரமாணமுமில்லை. ஆகையாலே தூஷ்ணீம் அநுஷ்டித மென்னப் பொருந்தாது.

இனி, "ஸ்ரீ விதுரர்க்கு துர்யோதநன் சொன்ன ஜாதி விசேஷத்தை பகவான் இசைந்தானுயிற்று" என்று இதையொரு விஷயமாக எழுதியுள்ளார் அவர். அதாவது, கண்ணபிரான் விதுரர் திருமாளிகையிலே அமுதுசெய்து வந்தவாறே *கிமர்த்தம் புண்டரீகாக்ஷ! புக்தம் வ்ருஷல போஜநம்*= கண்ணு! சூத்ரனுடைய சோற்றை ஏதுக்காக உண்டாய்? என்று துர்யோதநன் கேட்க, அதற்குக் கண்ணபிரான் 'விதுரர் சூத்ரரல்லர்' என்று பதில்சொல்ல வேண்டியிருக்க அங்ஙனம் சொல்லாமல் *த்விஷந்நம் ந போக்தவ்யம்—பாண்டவாந் த்விஷஸேராஜந்* இத்யாதியாலே வேறு பதில் சொல்லியிருக்கக் காண்கையாலே [துரியோதநனுடைய பேச்சை மறுத்துரையாமையாலே] கண்ணன் விதுரரை சூத்ரனுகவே இசைந்தானுயிற்றென்பது அவருடைய கருத்தாகின்றது. இதுவும் ஸமஞ்ஜஸமாகாது. துரியோதநனுடைய கேள்விக்குக் கண்ணபிரான் திருவுள்ளத்தாலே முக்கியமாகச் சொல்லவேண்டியதாகத் தோன்றின பதில் எதுவோ அது அங்கு வெளிவந்திருக்கின்றது. 'துரியோதநா! நீ என்னுயிர் நிலையிலே த்வேஷிக்கையாலே *யோ மே பக்தஜநம் த்வேஷ்டி தம் வித்யா தந்த்யரேதஸம்* என்கிறபடியே நீ அந்த்ய ரேதஸ்ஸாகையாலே உன்னைப் பரித்யஜித்தோம் என்று இங்ஙனே கண்ணன் கூறியுள்ள பதில்தான் அவசியமானது. அவன்னெஞ்சிலே தோற்றக்கூடிய பதில் இதுவேயாகையாலே இதைவிட்டு வேறு பதில் சொல்லும்படியான அசாதுர்யம் கண்ணனுக்கு எங்கிருந்து வரும்? *ந சூத்ரா பகவத் பக்தா விப்ரா பாகவதா: ஸ்ம்ருதா:* இத்யாதிகளாலே ஏற்கெனவே ஸித்தமான விஷயத்தை அங்குக் கண்ணன் எடுத்துரைக்கவேண்டிய அவசியமில்லாமையாலன்றோ அதைச்சொல்லாது விட்டது. அதனுல், விதுரர் சூத்ரரேயென்று கண்ண

பிரான் இசைந்ததாக எப்படியாய்விடும்? ஆகாது. இந்த ப்ரகரணத்தில் இங்ஙனே மற்றுஞ் சில விஷயங்களும் அபிநிவேச விஜ்ரும்பிதமாக எழுதப்பட்டிரா நின்றமை காண்க. ''திரு ஸுரபியானாலும் கோத்வம் கழியாதிறே'' என்றவாதமும் அஸ்தாநே. 'பகவத்பக்தா ந் சூத்ரா:' என்று ஸ்பஷ்டமாக எடுத்துக் கழித்தாப்போலே 'தேவ ஸுரபி: ந கௌ:' என்று எங்கும் சொல்லாமையாலே.

அக்ஷரங்களில் ஶ—ஷ—ஸ—ஹ என்னுமிவை வடமொழிக்கே அஸாதாரண மானவை. இவ்வெழுத்துக்களை முற்கொண்ட பதங்களோடே (திரு) என்பதைச் சேர்த்தால் சிரிப்பர்கள். திரு ஹயக்ரீவர், திரு ஸாரநாதன், திரு ஶரண்யன்......... இப்படி சில அக்காளிப்பிச்சங்கள் ப்ரயோகிக்குமேயொழிய ஸ்வாமி தேசிகனு ப்ர யோகிப்பவர். மாடுகளுக்கு விரேசன முண்டானால் அதை கழிதல் என்றுதான் உலகர் சொல்லுவது. ஸுரபியாவது காமதேநு; காமதேனுவானாலும் அது ஜாதியில் கோவாகையாலே கோக்களுக்கு உண்டாகக்கூடியகழிதல்[விரேசனம்] அநிவார்யமே யாகும். ஆக, விரேசனமாகிற கழிதல் உண்டானால் அது வ்யக்திக்கு ஆகுமே யொழிய ஜாதிக்கு ஆகமாட்டதே; கோவ்யக்திக்கு விரேசன முண்டாகுமே யல்லது கோத்வஜாதிக்கு விரேசனமுண்டாகாது என்பதில் யார்க்கும் விவாதமில்லை. ஆகவே இது அப்ரஸக்த ப்ரதிஷேதம். இதை கவிதார்க்கிக கேஸரியான ஸ்வாமி ஒருகாலும் செய்தருளமாட்டார்; இதனாலும் அது தேசிக ஸூக்தியன்றேன்று பேரருளாள ஜீயர் பணிக்கும்படி. அஹல்யைக்கு ஸ்த்ரீத்வஜாதி எப்படி கழிந்தது? ஶிலாத்வ ஜாதி எப்படி வந்தது? ஶிலைக்கு ஶிலாத்வ ஜாதி எப்படி கழிந்தது? ஸ்த்ரீவ ஜாதி எப்படி வந்தது? ''ஶிலாதே: ஸ்த்ரீத்வாதி:'' (ரஹஸ்யத்ரயஸாரே) என்றதில ஆதி பதங்களுள்ளன; அவற்றால் க்ரஹிக்கப்படுமவை எவையோ? இது திஷ்டஹதமுத்க ராபிகாதமல்லவா?

ஸ்ரீ மதுராந்தக வித்வான் திருக்கச்சிநம்பிகளிடம் அபசாரப்பட வேணுமென்று கருதியே திருக்கச்சிநம்பி வைபவம என்று மகுடமிட்டு ஜாதி விசாரத்தை வீணாகப் புகுத்திக்கொண்டு ''தொண்டர்குலம் பெற்றாலும் ஜாதிமாறாது'' என்றும், ''நம்பிகள் பக்தாக்ரேஸரராயிருக்கச் செய்தேயும் ப்ராஹ்மண்யம் பெறவில்லையே'' என்றும் எழுதிவிட்டு ''இவ்வாறு திருக்கச்சி நம்பிகளுடைய பெருமையை இவ்வியா ஸம் மூலம் விண்ணப்பித்துக்கொண்டேன்'' என்று நிகமித்திருக்கிறார். இவருடைய கருத்தால் இதுதான் திருக்கச்சிநம்பி வைபவம் போலும். ''மதுராந்தகாசாரியர் ஏதோ சில புத்தகங்கள் வாசித்திருந்தாலும் ஐயோ! வ்யுத்பத்தியில்லையே!'' என்று சிலர் சொல்லிக்கொண்டிருப்பதுண்டு; அதுபோலவன்றோ இந்த வார்த்தையுள்ளது. திருக் கச்சிநம்பிகள் ப்ராஹ்மண்யம் பெற்று இவருடைய க்ருஹத்தில் நிமந்த்ரணத்திற்குவர விருக்கிறாரா? நம்பிகளுக்கு ப்ராஹ்மண்ய முண்டாவென்று இவரை யாராவது கேட் டார்களா? *நைஷாம் சிந்த்யம் குலாதிகம்* என்கிற ப்ரமாண வசனத்தை ஸ்வாமி தேசிகனும் உதாஹரித்தருளி யுள்ளார். அப்படியிருக்க, ஜாதிவிசாரம் செய்ய இவர் ஏதுக்குக் கை வைத்தார்? *தொண்டக் குலத்திலுள்ளீர்!* என்றழைத்த பெரியாழ்வார் *பண்டைக் குலத்தைத் தவிர்ந்து* என்றார். தவிர்ந்த பண்டைக்குலம் எதுவென் பதை இவர் அறிவரோ? ப்ராஹ்மண்யமில்லையே யென்கிற இவரைக் கேட்கிறோம்;

*விப்ரோ விப்ரத்வம் கச்சதே தத்வதர்சீ* என்கிற வசனமறிவீரோ? அதன்பொருள் அறிவீரோ? பெரியாழ்வாரும் தொண்டரடிப்பொடியாழ்வாரும் ப்ராஹ்மண்யம் பெற்றிருந்து என்ன அதிஶயம் பெற்றுவிட்டார்கள்? நம்மாழ்வாரும் திருப்பாணாழ்வாரும் என்ன சிறுமைபெற்று விட்டார்கள்? முநிவாஹநபோகத்தைப்பற்றி நாம் எழுதியிருந்தவற்றுக்கு இவர் என்ன விடை கூறினார்? அதை மீண்டும் நினைவூட்டுகிறோம்; விடையிறுத்து வீறு பெறலாமே. அதை நாம்முக்கியமாக எதிர்பார்க்கிறோம்.வாய்திறவாரிவர்.

இவர் எழுதிய வியாஸத்தில் முதல் வரியிலே "இம்மஹானுடைய" என்கிறார். இக்காலத்திலுள்ள லௌகிகப் பெரியார்களை ப்ரஸ்தாவிக்கையில் "இம்மஹான்" என்றும் "இம்மஹநீயர்" என்றும் எழுதுவதுண்டு *ராமாநுஜமுநேர்மாந்யமென்று புகழ்பெற்ற இப்பேராசிரியர் பக்கலில்இவருடைய ப்ரதிபத்தியின் திறம் அறியலாயிற்றன்றோ.

ப்ரதமகபளே மக்ஷிகாபாத: = திருக்கச்சிநம்பிகளின் திருவவதாரஸ்தலத்தைப் பூந்தமல்லியென்றெழுதி ஏதோ விவரணம் செய்கிறார். திருவள்ளூர், தின்னனூர், திருப்பக்குழி...என்றிங்ஙனே சிலர் வழங்குமாபோலே பூந்தமல்லியென்றும் பூனமல்லியென்றும் சிலர் வழங்குவதை மட்டுமே யறிந்தவர் இவர். பூந்த என்கிறசொல் என்ன பாஷை யென்று வினவினால் என்னுடைய பாஷையென்பர்போலும். *பூவிருந்தவல்லிமேய புனித நம்பி வாழியே* என்று நிச்சலும் வாழ்த்தப்படுகிற இந்த மஹாசார்யருடைய திருவவதார ஸ்தலத்தின் திருநாமம் பூவிருந்தவல்லியென்பதே யொழிய இவர் எழுதுகிறபடியன்று. பூவிருந்தவல்லித்தாயாரென்று அவ்விடத்து நாச்சியாருடைய திருநாமமும் ப்ரஸித்தம். *வானமாமலையே! அடியேன் தொழவந்தருளே* என்கிற பாசுரப்படி எம்பெருமான் திருநாமமான வானமாமலை யென்பதையிட்டே அவ்வூரை வழங்குமாபோலே இங்கும் நாச்சியார் திருநாமத்தையிட்டே ஊரை வழங்கத் தொடங்கினார்களென்பதை இவர் இனியாவது அறியட்டும். இத்தகைய அபத்தங்கள் கிடக்கட்டும்.

இம்மஹான் தமது வியாஸத்தின் முடிவில் *தோஷைரேதை: குலக்நாநாம் வர்ணஸங்கரகாரகை:, உத்ஸாத்யந்தே ஜாதிதர்மா: குலதர்மாச் ச சாச்வதா:* என்றான் கீதாசார்யன்'' என்றெழுதியுள்ளார். அர்ஜுநஸஞ்ஜய—த்ருதராஷ்ட்ராதி வசனங்களையெல்லாம் கீதாசார்ய வசனமாகவே கொள்ளுகிற இவருடைய மருளுக்கு *நித்யஸ்ரீர் நித்யமங்களமென்று மங்களாசாஸனம் செய்து நிற்கிறோம். ... *

**திருக்கச்சிநம்பி வைபவ பரிஷ்காரம் முற்றிற்று.**

# மதுராந்தக பண்டிதரின் திருக்கண்விழிப்பு

கம்பராமாயணத்தில் யுத்தகாண்டத்தில் இராவணன் மந்திரப்படலம் வாசித்திருக்கிறீர்களா? திருவடி இலங்கையைச் சுட்டுத் திரும்பினபின்பு இராவணன்மந்திராலோசனை ஸபை யொன்றுகூட்டுகிறான். அப்போது கும்பகரணனை அகாலத்தில் துயிலெழுப்ப நேர்ந்தது. வெகு சிரமப்பட்டு எழுப்பிக்கிளப்பிச் சபாமண்டபத்தில் உட்

காரவைத்தபின், தன்னை பெழுப்பின காரணத்தைக் கேட்டறிந்த அவன் சத்துவ குணம்மேலிட்டு இராவணனுக்குப் பலவாறு நன்மதிகூறிவருகையில் இந்தச் செய்யுள் ஒன்று காண்கிறது;—

"சிட்டர் செய்ல் செய்திலை குலச்சிறுமை-செய்தாய்,
மட்டவிழ் மலர்க்குழலினளை யினிமன்னு!
விட்டிடுதுமேல் எளிய மாதுமவர் வெல்லப்,
பட்டிடுது மேல்துவு நன்று பழியன்றால்" என்பது.

இதன் கருத்தாவது; இராவணா! நமது குலம் மிகவுயர்ந்த குலம்; அதிற் பிறந்து வைத்து அந்தோ! குலத்திற்கு இழுக்கான கொடிய செயலைச் செய்தாய்; அந்தச் சீதையை விட்டுத் தொலைத்து விடுவோம்; ஆனால் விட்டுவிட்டால் அது நமக்கு இளப்பமேயாகும்; போர்செய்ய வேண்டியதுதான்; போர் செய்தால் அத்தலைக்கு வெற்றியும், நமக்குத் தோல்வியும் திண்ணம். ஆயிடுக: இராமன் கையால் நாம் கொலையுண்டு தொலைந்துபோவதுதான் நமக்குப் புகழேயாகும், பழியாகாது—என்பதாம்.

இதேபோல், நம் மதுராந்தக பண்டிதரைத் திருப்பள்ளியெழுச்சிபாடி யெழுப்பி'அதை மறுக்க வேணும், இதை ஒழிக்கவேணும்; நாம் மறுத்து எழுதுகிற மசி உலருவதற்கு முன்னே நமது அபத்தக்களஞ்சியங்களுக்கெல்லாம் கண்டனம் வெளிவந்திடுமாயினும் அதுவும் நமக்குப் பெரும்புகழேயாகும்; இதுகாறும் நெடுநாளாக நாம் அடைந்து வரும் உலகம் பரந்த புகழை இப்போது இழக்கலாகாது' என்ற—அவரை யெழுப் பினவர்கள் கூறினர்களோ! அன்றி அவர் தாம் கூறினரோ! அறியோம். "தத்தக பித்தக தாலேலோ" என்கிற புறையில் பழகினவரும் தேர்ச்சிபெற்றவருமான பண்டிதர் "ஸ்ரீரங்கஸ்ரீவிவேசனம்" என்று ஒரு சிறு சுவடியை வெளியிட்டுள்ளார் காகிதத்தைக் கையில் கொண்டு யார் எது எழுத நினைத்தாலும் மசி நானெழுதமாட்டேனென்னுது; காகிதம் அதை நான் தாங்கமாட்டேனென்னுது. "மம ஜநநீ வந்த்யா" "மம தயிதா ஸ்வைரிணீ" இத்யாதிகளாக இவர் பலபலவுமெழுதினலும் காகிதமும் தாங்கும், அச்சிடுபவரும் அச்சிட்டுத் தருவர். இரண்டுமூன்று வருடங்களுக்கு முன்பு மறைந்து போன D. T. தாதாசாரியர் என்கிற திருவரங்கம் திருமலை தாதாசாரியரும் இந்த மதுராந்தக பண்டிதரும் முக்கியமாக இரண்டு விஷயங்களுக்கு பதில் கூறவேண்டிய தாயிற்று. இந்தப் பொறுப்பு முக்கியமாக D. T. தாதாசாரியர் தலையில் நின்றது. அவர் இருபத்தேழு வருஷகாலம் தேள் கொட்டின திருடன்போலிருந்து காலம் கழித்தார். இவரும் அப்படியே. இப்போது மானம் தாங்கமாட்டாமல் ஏதாவது எழுதித் தொலைக்கவேணுமேயென்று பழிகழித்திருக்கிறார். "பாதுகா ஸஹஸ்ர உத்ஸவ விழா" என்று மேலே காண்பது. உள்ளே லோகாபிராமமான இரண்டு வியாஸங்களுக்குப் பிறகு ஆங்கிலத்தில் (Fore Word) முகவுரை யொன்று காண்கிறது. அதை யெழுதியவர் அவர் தாம் ப்ரஸ்தாவிக்கும் தத்வார்த்த நிருபணமென்னும் அந்வர்த்த நாம முடைய (உவே. கபிஸ்தலம் P. B. ரங்காசார்ய ஸ்வாமியின் க்ரந்தத்திற்கு மூலகாரண பூதரான ஸ்ரீரங்கம் அட்வகேட் ஸ்வாமி. அந்த முகவுரையினல் மிக முக்கியமான வொரு தத்வார்த்தம் வெளிவருவதால்அதன் மொழிபெயர்ப்பைமுன்னம்வெளியிடுகிறோ மிதோ பாராக்களுக்கு லக்கமிட்டு அந்த லக்கத்தினடைவே பதில் தெரிவிக்கிறோம்.

(ஆங்கில முன்னுரையின் மொழிபெயர்ப்பு)

1 "ஸ்ரீராமாநுஜனடியார்களில் தோன்றியிருக்கும் கலாவிவாதம் மிகவும் நவீனமானது—இது ஸமூஹநலனுக்கு விரோதி தரிசனத்துக்கு அவசியமுமன்று—தென்கலை, வடகலை என்கிற சொற்கள் ப்ராமாணிகமான எந்த க்ரந்தத்திலும் விளக்கப்படவில்லை இந்த விவாதமே 1802ம் வருஷத்திற்கு முந்தினதல்ல.

2 திருவாய்மொழிக்கு சில ஆசார்யர்களின் வியாக்கியானத்தையே பவித்திரமானதென்று (ப்ரமாணமென்று) சொல்லுமதை தென்கலையென்றும், அவ்வர்த்தங்களை ஸ்ரீபாஷ்யமென்கிற உரைகல்லின் மேல் உரைத்துப்பார்ப்பது வடகலை யென்றும் விமர்சகர்கள் சொல்லுவார்கள் இருகலைகளுக்கும் பேதம் ஏதோ சில பழக்கங்களைப் பொறுத்ததேயொழிய கொள்கைகளில் முக்கியமான வேற்றுமைகள் கிடையா—

3 எப்படியானாலும் கலா சம்பந்தமான சச்சரவினால் ஸன்னிதிகளுக்குப் பெரிய தீங்கு விளைந்திருக்கிறதேயன்றி ஒருகலைக்கும் ஒருவித நலனும் உண்டானதில்லை உண்மையில், ஒரு கோயிலின் தன்மை அதில் அனுஷ்டிக்கப்படும் ஆகமத்தின் உள் பிரிவைக்கொண்டு தான் நிர்ணயிக்கப்படவேண்டும் ஆனால் தற்சமயம் அது அக்கோவிலைச் சேர்ந்த பெரும்பான்மையான பக்தர்களின் நாமத்தையிட்டு நிர்ணயிக்கப்படுகிறது அதுவும் தற்சமயத்திலன்று, ஆனால் நம் புத்தி செல்லும்வரை பழங்காலத்திலாசாரத்தைக் கொண்டு ஆம், 1800 க்குப் பிறகுதான் இதனில் சீர்கேடான நிலைமையென்னவென்றால், இக்கலா சச்சரவுகள் தாங்கள் நெற்றியில் திருமண் அணிந்துகொள்ள விரும்பாமல் (அல்லது பொறுமல்) யானைகளுக்கும் ஸன்னிதிப்ராகாரங்களுக்கும், மூலவிக்ரஹத்திற்கும் ஆசாரியர்களுக்கும் திருமண் அணிவிப்பவர்கள் தான் இவ்விஷயத்தில் விசேஷித்து சிரத்தையெடுத்து வருகிறார்கள்.

4 ஸமீபத்தில் ஒரு ஆசிரியர், மற்றபடி குற்றமற்ற தமது சரித்திர ஆராய்ச்சி நூலொன்றில், ஸ்ரீகாஞ்சி வரதராஜப் பெருமாள் ஸன்னிதி தென்கலையே என்று ஸ்தாபிக்க வெண்ணி அதற்காக தான் தென்கலையென்றபிமானித்த சில ஆசாரியர்களுக்கு அக்கோவிலில் ஸம்பந்தமிருந்ததென்று சில தவறான விஷயங்களை எழுதிவிட்டார் இப்புத்தகத்தால் விளையும் அனர்த்தத்தை விலக்கவெண்ணி நாம் பல சரித்திரகாரர்கள் காட்டிய உண்மையை விளக்கி அவருடைய வாதங்களை பரிஹரிக்க நேர்ந்தது. இப்புத்தகத்தில் நான் வடகலையின் பெருமையை விவரிக்கமுயலவில்லை யாகிலும், (என்னைத் தவறாக எண்ணிய) தென்கலையார்கள் உடனே தத்துவார்த்த நிருபணமென்கிற தமிழ்ப் புத்தகமொன்றை வெளியிட்டார்கள் இப்புத்தகம் உண்மையையாராய்வதற்காக எழுதியதன்று; என்னை கொழுத்த வடகலையபிமானியென்று காட்டவும் துச்சமான, அக்ஷராஸ்யர்களும் நல்லொழுக்கமுடையோரும் பேசத்தகாத துச்சமான தூஷணைகளைப் பொழிவதற்காகவே எழுதப்பட்டது.

5 இதற்குள் மற்றொருவேடிக்கை தோன்றியது. ஒருஅச்சுக்கூடத்திற்கும்பத்திரிகைக்கும் ஸொந்தக்காரரான ஒரு அட்வகேட் எனது புத்தகத்தைத் தான் வாசித்துப் பார்க்கவில்லையென்று சொல்லிக்கொண்டே அதைக் கண்டிக்க விழுந்து விட்டார்! இதுவுமல்லாமல் பள்ளியில் என்னுடன் ஒரே வகுப்பில் படித்து நான் வாதிக்கும் நியாயாலயங்களிலே தாமும் வாதாடும் அவ்வக்கீல் என்னைத் தனக்குத் தெரியா

தென்று சொல்லவும் துணிந்து விட்டார். மூடநம்பிக்கைகளையே சரித்திர உண்மை யாக அவர் ஆக்க முயன்றுவிட்டார்.

6 தத்வார்த்தநிருபணத்தை மேலெழுந்து பார்த்தாலும்அதன்ஆசிரியர் யாரென் பது தெரியும். அவஸரமாக அச்சுத்தாள்களைத் திருத்தும்பொழுது 'விஷ்வக்ஸேனர்' என்கிற சொல்லில் நேர்ந்துவிட்ட பிழையையே மிகப்பெரிய அபராதமாக அவர் சுட்டிக்காட்டுகிருர். நான் ஆராய்ந்திருக்கும் நாற்பதிற்கும் அதிகப்பட்ட விஷயங் களில் மூன்று விஷயங்களைமட்டும் தொடும் அவர் தம் புத்தகத்தில் பற்பல ஆசாரங் கள் பழக்கவழக்கங்களைப்பற்றி எழுதி புத்தகத்தை நிரப்பியுள்ளார்; சரித்திர ஆசிரிய ஞ எனக்கு இவ்விஷயங்களை ஆராய்வதில் அக்கரையில்லை என் புத்தகத்தில் இவைகளை ஆராய்ந்ததுமில்லை. நிரூபணகாரர் D. T. ஸ்வாமி பூர்வபக்ஷமாகச் சொன்ன வொருவிஷயத்தை அவருடைய ஸித்தாந்தமாகவே எழுதிவிட்டார்.

7 நான் சரித்திர ஆராய்ச்சிகளிலேயே ஈடுபாடுடையவனுகையால் இவ்விஷயத் தில் தொடர்பு கொள்ளவில்லை. தத்வார்த்த நிரூபணம் கிடைத்த இரண்டே நாட் களுக்குள் ஸ்ரீ மதுராந்தகம்ஸ்வாமி ஸ்ரீரங்கஸ்ரீவிவேசனம் என்கிற தமது சிறந்தநூலின் மாத்ருகையை எனக்கு அனுப்பித்தந்தார். ப்ரதிபக்ஷிகளின் துர்வாதங்களையும் பொய் யுரைகளையும் ஸ்வாமி நன்கு கண்டித்திருக்கிருர். இது வெளியாவதில் சிறிது விளப்ப மேற்பட்டாலும் இதனுல் பல அஜ்ஞாநாந்தகாரம் ஒழிக்கப்படும் என்பதில் ஐயமில்லை. .........ஆக இவ்வளவும் ஆங்கில முன்னுரையின் மொழிபெயர்ப்பு

## இந்த முன்னுரைக்கு முன்னம் மறுப்புரைக்கிறேம்

1. இந்த முன்னுரையின் முற்பகுதியினுல் நிஸ்ஸந்தேஹமாக விளங்குவது என்ன வென்ருல், ஸ்ரீவைஷ்ணவ வகுப்பில் வடகலைத் திருமண் இட்ட வகுப்பினர் வந்து புகுரத்தொடங்கின காலம் இருநூறு வருடங்களுக்கு உட்பட்டதே யென்பதாம். கி பி. 1802ஸு என்று குறிப்பாக முகவுரைகாரர் எழுதுவதன் மருமம் அறிவீர்களா? அப் போதுதான் (நவீந வைஷ்ணவர்களென்று ப்ரஸித்தர்களான) வடகலை வைணவர்கள் கோவில்களில் புகுந்து பல்பல கலஹங்களைக் கிளப்பினரென்பது நீதிமன்றத்துரிகார்டு கள் பலவற்ருலும் விளங்கியிருப்பது அதுகொண்டே இந்த அட்வகேட் எழுதுகிருர்.

ஸ்ரீராமாயணத்தில் பாலகாண்டம் அயோத்யாகாண்டம் என்றுபோய் முடிவில் யுத்தகாண்டம் காணப்படுகிறது. இவர்களின் ராமாயணத்தில் யுத்தகாண்டமே முதலாயிற்று. அப்போது பல திவ்யதேசங்களில் தோன்றின பல ஸிவில் கிரிமினல் வியாஜ்ஜியங்களெல்லாவற்றிலும் தென்கலையார்களே வாதிகளாக நின்று முறையிட் டுக் கொண்டிருப்பது அபலபிக்க முடியாமலிருப்பதன்ருே?

ஸ்ரீராமாயணம் முதலான இதிஹாஸ புராணங்களில் பகவானுடைய அவதாரத் திற்குக் காரணம் கூறும்போது தேவர்கள் அரக்கரசுரர்களால் தாங்கள் படும் ஹிம் ஸைகளை முறையிட்டுக்கொள்ள, அவர்களுக்குஅபயமளித்து ஸ்ரீராமக்ருஷ்ணுதியவதா ரங்களை எம்பெருமான் செய்தருளினதாகச் சொல்லிற்று. ஸ்ரீரா. அயோத்யாகாண்ட உபக்ரமத்தில் *ஸ ஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:, அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந:* என்றது காண்க. அஸுரராக்ஷசர்

களால் நேர்ந்த கஷ்டங்களைத் தேவர்கள் முறையிட்டுக்கொண்டு தங்கள் கஷ்டங்கள் தீரப்பெற்றதாக இதிகாச முள்ளதேயொழிய, அசுரராக்ஷசர்கள் தாங்கள் தேவர்களால் கஷ்டமடைந்து முறையிட்டுக் கொண்டதாக ஒருபுராணத்திலும் கண்டதில்லை. இந்த அட்வகேட் அப்படியொரு புராணம் கண்டிருந்தால் காட்டட்டும். இதேபோல் 1800 ஆம்வருடத்திற்கு முன்பின்னாக திவ்யதேசங்களில் புகுந்து கஷ்டங்களை உண்டு பண்ணத் தொடங்கினவர்கள் எந்தவகுப்பினர்? ஸிவில்கோர்ட்டுகளிலும் க்ரிமினல் கோர்ட்டுகளிலும் முறையிட்டுக் கொண்டு துயர்தீர்ந்தவர்கள் எந்தவகுப்பினர்? என்பதை ஆராய்வதற்கு நம் அட்வகேட் ஸ்வாமிகளுக்கு ஆற்றல் இல்லையா? இவர் எழுதத் தொடங்கினது காஞ்சீபுரம் தேவராஜஸ்வாமி தேவஸ்தானத்தைப்பற்றித் தானே. ஸ்ரீமான் டாக்டர் ராமனவர்கள் தொண்ணூறு ரூ. விலையுள்ள புத்தகம் எழுதி வெளியிட்டதும் காஞ்சீபுரம் கோவிலைப்பற்றித்தானே. அந்த கோவில் ஸம்பந்தமான கலைச் சண்டைகள் நீதிமன்றங்களில் பலபலவும் ஏறியிருக்கின்றன. அக்காலத்தில் கடைசியான கோர்ட்டு த்வீபாந்தரத்திலிருந்தது. அவ்வளவும் சென்றிருக்கின்றது காஞ்சீபுரம் கோவில் வ்யவஹாரம். ஸிவில் கிரிமினல் ஆகிய இரண்டு வழிகளிலும் முறையிட்டுக் கொண்டவர்கள் தென்கலையார்களேயல்லது வடகலையார்களல்லர். அவர்கள் தாங்கள் வாதிகளாகச் சென்று முறையிட்டுக் கொண்டது ஒருகாலுமில்லை யென்பதை இனியாகிலும் இவர் செவ்வனே அறிந்துகொள்ளவேணும்.

"அப்படியே யிருக்கட்டும், அதனாலென்ன?" என்று அட்வகேட் கேட்கமாட்டார் விவேகிகளொருவரும் கேட்கமாட்டார் கலைச் சண்டையைத் தொடங்கினவர்கள் எந்த வகுப்பினர்? தொடங்கினதுமட்டுமன்றிக்கே அதை மேன்மேலும் வளரச் செய்தவர்களும் எந்த வகுப்பினர்? என்பதை நிர்த்தாரணம் செய்ய இது மிகமுக்கியமானதல்லவா! திருவரங்கம் பெரிய கோயிலில் ஸ்வாமி தேசிகனுடைய திருநெற்றியில் ஆதியிலிருந்து விளங்கின திருமண்காப்பு எது? அதை மாற்றினவர் யார்? அப்படி மாற்றினது எந்த வருஷத்தில்? அதற்காக ஸஹஸ்ரஸமர்ப்பணம் செய்து மேலே நீதிமன்றங்களிலும் ஊர்ஜிதப்படுத்திக்கொண்டவர் யாவர்? அவரோடு இவர்க்கு ஏதேனும் உறவு உண்டா? ......இத்யாதிகளான கேள்விகள் அவசியமல்லவா? அந்த வ்யவஹாரம் இன்றைக்கும் முடிந்தபாடில்லையன்றே? பிராமாணிகமாக எழுதுபவர் இவ்விஷய மொன்றைமட்டும் உள்ளவாறு உலகுக்குத் தெரிவித்தால் போதுமே. இந்த விசாரங்கள் இங்கு நமக்கு அவசியமல்ல; அட்வகேட் தனது முன்னுரையில் கலைச் சண்டை, கோவில் சண்டை இத்யாதி ப்ரஸங்கம் செய்திருப்பதால் அதைப் பற்றித் தெரிவிக்க நேர்ந்தது.

இவர் பலபல க்ரந்தங்களையும் கற்றவர்போல் கண்டவர்போல் "தென்கலை வடகலை என்ற சொற்கள் பிராமாணிகமான எந்த க்ரந்தத்திலும் விளக்கப்படவில்லை" என்று ஸஹஸா எழுதுகிறார். கம்பராமாயணத்தின் முகப்பில் "வடகலை தென்கலை வடுகு கன்னடம், இடமுளபாடை" என்றுள்ளது. திருமங்கையாழ்வார் தேரழுந்தூர்ப்பதிகத்தில் "செந்தமிழும் வடகலையும் திகழ்ந்த நாவர்" என்றும், திருநெடுந்தாண்டகத்தில் *செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி* என்று எம்பெருமானைத்

4

தென்கலை வடகலையாக் (ஸாமாநாதிகரண்யேந) பேசியும், ஸ்ரீ குலசேகரப்பெருமாளும் *அந்தமிழினின்பப்பாவினை அவ்வடமொழியை* (பெருமாள்திருமொழி 1-4) என்று அவ்விதமாகவே ஸாமாநாதிகரண்யேந பேசியும் போந்தார். "வடமொழி மறையென்றது தென்மொழிமறையை நினைத்திறே" என்பது ஆசார்யஹ்ருதய திவ்ய ஸ்ூக்தி. தென்கலை வடகலை யென்பது பாஷாமாத்ரத்தைச் சொல்லுமதாய்ச் சில விடங்களில் நிற்கும். த்ராவிட வேத ஸம்ஸ்க்ருத வேதங்களைச் சொல்லி நிற்குமிடங்களுமுண்டு இச்சொற்களுக்கும் புண்ட்ரத்துக்கும் என்ன ஸப்பந்தமென்று கேட்கலாம், பஸ்மதாரிகளைப் பார்த்தவுடனே அத்வைதிகளென்றும் ஸ்மார்த்தர்களென்றும் சைவர்களென்றும் சொல்லுகிறோம்; சந்தனோர்த்வபுண்ட்ரதாரிகளைக் கண்டவுடனே மாத்வர்களென்கிறோம், ச்வேதம்ருத்புண்ட்ரதாரிகளைக் கண்டவுடனே ஸ்ரீவைஷ்ணவர்களென்றும் விசிஷ்டாத்வைதிகளென்றும் சொல்லுகிறார்கள். ஆக, இந்தவ்யவஹாரங்கள் முகக்குறிகொண்டு வழக்கத்தின்கீழ் வந்தவை.

அட்வகேட் எழுதுகிறார்—"அவஸரமாக அச்சுத்தாள்களைத் திருத்தும்பொழுது விஷ்வக்ஸேனரென்கிற சொல்லில் நேர்ந்துவிட்ட பிழையையே மிகப்பெரிய அபராதமாக அவர் சுட்டிக்காட்டுகிறார்" என்று. இங்குக் கேண்மின்; அச்சுப்பிழையையும் அறிவின் பிழையையும் கண்டறியவல்லார் இல்லாமற்போகவில்லை; ஸ்ரீமதே நாராயணாய நம: என்பது ஸ்ரீ புநே தாருபுநாயநம்: என்றிருந்தால் இதை அச்சுப்பிழை யென்பர். அத்தகைய இடங்களில் யாரும் எதுவும் பேசமாட்டார்கள். (நாராயணாய நம:) என்கிற விடத்தில் (கணபதயே நம: என்றோ சங்கராய நம: என்றோ இருந்தால் இதை அச்சுப்பிழையென்று பேதையனும் பேசான் இதைப்பற்றிமேலே விரிவாகஎழுதுவோம்.

அட்வகேட் K.N.S. எழுதுகிறார் (6-ந பாராவில்) "தத்வார்த்த நிரூபணத்தை மேலெழப் பார்த்தாலும் அதன் ஆசிரியர் யாரென்பது தெரியும்" என்று. விசேஷிதத்தை வ்யக்தமாக எழுதலாமே. "அதன் ஆசிரியர் அண்ணங்கராசாரியர் என்பது ஒவ்வொரு வாக்கியத்தாலும் ஒவ்வோரெழுத்தாலும் நன்குதெரியும்" என்று கொட்டையெழுத்தில் அச்சிட்டிருக்கலாமே. "உலகில் எழுதவல்லவர்-பிறர் வர்வு சதபமுளும் வாய்திறக்க முடியாதபடி எழுதவல்லவர் அண்ணங்கராசாரியர் ஒருவரேயென்று K.N.S.ம் அவரைச்சார்ந்தவர்கள் பலரும் உறுதிகொண்டிருப்பது தவறாகஇருக்குமோ? தத்வார்த்த நிரூபணகாரர்தாமே அதில் இதைத் தெரிவித்தேயிருக்கிறார். P.B.A. என்கிற நான் இதோ எழுதுகிறேன்— நான் எழுதியச்சிட்டிருக்கும் நூல்கள் 1207. ஆயிரத் திருநூற்றேழு அவற்றில் இந்த K.N.S. போல்வாருடைய மருள்நீங்கவும் தெருள் பரவவும் எழுதிய துர்வாத நிரஸனநூல்கள் [நான்கு பாஷைகளிலும்] இருநூறுக்குக் குறையாமலிருக்கும். அவற்றில் எழுதப்பட்ட விஷயங்களைக் கொள்ளைகொள்வார்பலர்.

மதுரையில் ஸ்ரீமான் உவே. மாடபூசி. நரஸிம்ஹாசாரியர்—சதுர்ப்பாஷாவிசாரதர் (வடகலை ஸம்பிரதாயஸ்தர் 1971 ஸூத்தில் தத்வார்த்த நிரூபணமென்றொருசுவடியை யெழுதிவெளியிட்டிருக்கிறார்; அதில் தாம் சில வித்வான்களிடமிருந்து விஷயங்கள் க்ரஹித்ததாகத் தெரிவிக்குமிடத்தில் "காஞ்சீபுரம் பிரதிவாதிபயங்கரம் ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திகளிலிருந்தும் விஷயங்கள் க்ரஹித்ததாக" எழுதியுள்ளார். கபிஸ்தலம் ஸ்வாமியின் தத்வார்த்த நிருபணத்திலும் அவ்விதமாக எழுதப்பட்டுள்ளது. யசோ

தைப் பிராட்டி கண்ணனை நோக்கி *பல்லாயிரவரிவ்வூரில் பிள்ளைகள் தீமைகள் செய்வார், எல்லாமுன்மேலன்றிப் போகாது* என்று சொன்னாள். அப்படிசொல்லவேண்டிய அவசியமில்லையிங்கு. கபிஸ்தலவித்வானின் நூலில் பேர்க்கவும் பேராத விஷயங்களேயிருப்பதால் அதை நானேயெழுதினதாக இசைந்து கொள்ளத் தடையில்லை.

## இடையில் மிகமுக்கியமாகத் தெரிவிப்பது

அட்வகேட்டின் ஆங்கில முன்னுரை மொழிபெயர்ப்பில் பாராக்களுக்கு லக்கமிட்டு அந்த லக்கத்தினடைவே மறுப்புத் தெரிவித்து வருவோமென்று முன்னம் எழுதியிருந்தோம். ஆயினும் முக்கியமான விஷயங்களை முன்னம் தெரிவித்தாக வேண்டிய அவசியமிருப்பதால் சிலவிஷயங்கள் அடைவுமாறியும் தெரிவிக்கலாகிறது. இதே க்ஷணத்தில் (17—4—78) பகல் 12 மணிக்கு நமக்குப் பரம ஸ்நிக்தரான ஒரு தாதாசாரியர் ஸ்ரீரங்கம் ஸ்ரீதேசிக ஸித்தாந்த அபிவர்த்திநீ ஸபா *வைரவிழா மலர்* என்றொரு புத்தகம் கொணர்ந்து கொடுத்து "ஸ்ரீரங்கத்திலொருபெரியவர் இதை தேவரீரிடம் சேர்ப்பிக்கும்படி கொடுத்தனுப்பினார் என்று சொல்லிக் கொடுத்தார். அதைப் பிரித்தவுடனே (பத்து பன்னிரண்டு வரி) வடமொழி வியாஸமொன்று கண்ணில் பட்டது. "அநாக்ராதாவத்யம் பஹுகுணபரிஜுஹி — வாணீவிலஸிதம்" உள்ளதா? அல்லது "ந சாஸ்த்ரஜ்ஞானம் நச வேதஜ்ஞானம் கவித்வதா நாஸ்தி குதஸ்தி ப்ரஜ்ஞா, ததாபி ப்ரேமேண ப்ருவாமி ச்லோகம் ச்ரோத்ரப்புடத் தோஷகரம் ந்ருணாநாம்" என்னுமாபோலே யுள்ளதா? பார்ப்போம்—என்று பார்க்கத் தொடங்கினேன். இவர்களின் வகுப்பில் ஸம்ஸ்க்ருத பண்டிதர்களுக்கும் இவ்வளவு துர்ப்பிக்ஷமா? என்று மிக வருந்தினேன். ஸம்ப்ரதாய விவேகமுள்ளவர்களைக் கொண்டு எழுதுவிக்கலாகாதா? ஸம்ப்ரதாய விஷயங்களில் நடைபெறும் விசாரங்களில் முடிவுகட்ட மத்யஸ்தர்கள் கிடைப்பது அரிது. வடமொழியில் அபசப்தங்களை நாமெடுத்துக்காட்டினால் இதை ஆராய்ச்சி செய்து முடிவுகட்ட மத்யஸ்தர்கள் எங்கும் கிடைப்பர்களே. எந்த மதத்திலும் கிடைப்பர்களே. அச்சுப்பிழையென்று சொல்லி உய்யவும் முடியாதபடியன்றோ எழுதியுள்ளார்கள். இவர்கள் கோஷ்டியில் "அண்ணங்கராசாரியர் அச்சுப் பிழைகளைப் பற்றிக்கொண்டு அட்டஹாஸம் செய்கிறார்" என்று கத்துபவர்கள் பலருளர். இங்கு நாம் காட்டுமவற்றிலும் அப்படியேதான் கத்தப்போகிறார்களா? என்பதை விரைவில் காண்போம். ப்ரக்ருதம் வடமொழி வியாஸத்தில் முதல் வாக்கியம்—"ஸ்ரீமத் வேதாந்த தேசிக ஸித்தாந்தாபிவர்த்திநீ நாமிகா ஸபா.........தேசிகோத்தம ஸார்வபௌமஸ்ய பஹுப்ரகாரம் கைங்கர்யம் குர்வந்தீ விராஜதே"—என்பது. குர்வந் என்கிற சத்ர்ப்ரத்யயாந்தபதம் ஸ்த்ரீத்வே குர்வதீ என்றாகுமேயல்லது குர்வந்தீ என்றாகாது அச்சுப்பிழை யென்று உடனே சொல்லி விடுவர்கள்; அந்தோ! அடுத்த வாக்கியத்திலும் "ஸம்பாவநாம் **குர்வந்தீ** ஆஸீத்" என்றுள்ளது. அங்கும் அச்சுப்பிழைதானென்பர்கள். நாம் ஹல்லுப் பிழையைக் காட்டுகிறோமேயொழிய அச்சுப்பிழை காட்டுகின்றிலோம். மாக காவ்யத்தில் (சிசுபாலவதே) 3-33 *மத்யேஸமுத்ரம் ககுப: பிசங்கீர் யா குர்வதீ......* இத்யாதி காண்க ஸ்ரீராமாயணத்தில் "ராஜஸம்ச்ரயவச்யாநாம் குர்வந்தீநாம் பராஜ்

ஞயா'' என்ற விடங்காண்க—என்பர்களிவர்கள். *ந த்வா சூர்மி தசக்ரீவ* என்றதை யும் காட்டட்டும். மேலே ''ஶதஸங்க்யாபர்யந்த பரிமிதாநி ரூப்யகாணி'' என்கிற வாக்யம் பரிஹாஸ்யமா? பரிஹார்யமா? என்பதை இவர்கள் போலி வித்வான்களை விட்டு பாரமார்த்திக வித்வான்களிடம் கேட்டுணரவேணும். பரிஹாஸ்யமும் பரி ஹார்யமுந்தான் என்று கூசாமல் கூறுவர்கள் (ஶதம் ரூப்யகாணி) என்றாலே போதும். ஶதஸங்க்யாபரிமிதாநி ரூப்யகாணி)—என்னலாம். இடையில் பர்யந்தமென்றொரு சொல்லைப் புகவிட்டிருப்பது அஸமஞ்ஜஸம். வாக்யத்தை விக்ரஹிப்பது எங்ஙனே? என்று கேட்டால் திசைதொறும் விழித்துச் சதுமுகனுவர். நூற்றுக்கணக்கான (ஏன்?) ஆயிரக்கணக்கான அச்சுப் பிழைகள் மலிந்த இப்புத்தகத்தில் இதையும் அச்சுப் பிழையென்று தள்ளிவிடலாமே யென்னில், நன்றுநன்று செல்வச் சிறப்பு மலிந்த இந்த சபை பொருட்செலவைப் பொருள்படுத்தாமல் இப்புத்தகத்தை அச்சுப் பிழை ஹல்லுப்பிழை ஒன்றுமில்லாமல் மறுபதிப்புச் செய்து வெளியிட்டால் அழகியதாம். உலகமெங்கும் பரவக்கூடிய இப்புத்தகம் இப்படி அவத்ய ஜடிலமாயிருக்கத்தகா தென்பதை ஹிதபுத்தியுடன் தெரிவிக்கிறேன். வடமொழியில் அபத்தங்கள் கிடக் கட்டும். பழக்கத்திலுள்ள தமிழ் மொழியில் ஸஹிக்க வொண்ணாத பிழைகள் எத் தனை தெரியுமோ? இங்கு மருமம் தெரிவிக்கிறோம் கேண்மின்; இவர்களுடைய இருள் துயக்கு மயக்கு மறப்புகளால் விளைந்த பிழைகளே அதிகம். *பாரேபரார்த்தம் கண நாயதி ஸ்யாத்* என்ற ஸ்ரீஹர்ஷகவிவாக்கை நினைவூட்டுவன. அவற்றுக்குக் கண்டனம் வந்தால் அச்சுப்பிழையென்று சொல்லித் தப்பித்துக்கொள்வதற்காக புத்தி பூர்வகமாகவே அச்சுப் பிழைகளையும் புகுத்துகிறார்கள். இல்லையில்லை யென்னட்டும்.

அபத்தஸங்குலமாக வடமொழி வியாஸமெழுதிய கூத்தபாக்கமய்யங்கார் தமிழில் எழுதுகிறார்—''இந்த ஸபை ஒவ்வொரு ஆண்டும் ராமாநுஜ தயாபாத்ராவதார மஹோத்ஸவத்தைக் கொண்டாடிவருகிறது'' என்று. இந்த வெட்கக்கேட்டை என்னென்பது? இருகலையாரும் கொண்டாட நின்ற* ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய தனி யன் தோன்றின நாள் தெரியாது; அதற்கொரு கொண்டாட்டமில்லை. ந்யாய ஸித்தாஞ் ஜந- தத்வமுக்தாகலாப- சததூஷணீப்ரப்ருதிகளான உத்தபோத்தமக்ரந்தங்கள் தோன்றினநாளும் தெரியாது, அவற்றுக்கு ஒரு கொண்டாட்டமுமில்லை. தோன்றின க்ஷணம் முதலாக திருவவதாரஸ்தல முட்பட (கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான) எத்தலத்திலும் பாதுகாஸஹஸ்ரபஹுமானம் பெற்று வருகிற வொருபத்யத் திற்கு வருஷம் மாஸம் திதி நக்ஷத்ரம் கிழமை லக்னம் ஹோரை எல்லாம் பொறிக்கப் பட்டு மஹோத்ஸவம் கொண்டாடிவருவது விவேகிகளோடு அவிவேகிகளோடு வாசி யற......இந்தவார்த்தை அபூர்ணமாகவே நிற்கட்டும். அல்லது இவர்களே பூரித்துக் கொள்ளட்டும் ராமாநுஜ தயாபாத்ரமண்டபமென்று ஒன்று கட்டியுள்ளார்கள். அதன் ஸமாசாரமென்ன வென்றால், அந்தபத்யம் தோன்றினது முதல் எவ்வெவ்விடங்களில் பாதுகா ஸஹஸ்ரபஹுமானம் பெற்றதோ அவ்வவ்விடங்களில் தோன்றிய ஸிவில் கிரிமினல் கோர்ட்டு ரிகார்டுகள் எல்லாவற்றையும் ஒன்று தப்பாமல் பழுதுபடாமே சேகரித்து வைத்திருக்கிறார்களா மிந்த பில்டிங்கில், அதற்கும் நித்யோத்ஸவ மாஸோ த்ஸவ ஸம்வத்ஸரோத்ஸவாதிகள் நடத்த உபகரிக்கவேணுமென்று ஏன் எழுதவில்லை?

திருமலையில் தினப்படி பஞ்சாங்க ச்ரவணத்தில் முந்துறமுன்னம் ஒரு சுலோகம் ஸேவிக்கப்படுகிறது: (அதாவது)—*ராக்ஷஸா: கலிமாச்ரித்ய ஜாயந்தே ப்ரஹ்மயோநிஷு, ப்ராஹ்மணுநேவ பாதந்தே தத்ராபி ச்ரோத்ரியாந் க்ருசாந்* என்பதாம். இதன் பொருளைக் கட்கூடாகக் கண்டுவருகிறேம். பெரிய திருமொழியில் திருவயிந்திரபுரப் பதிகத்தின் இறுதிப் பாசுரத்தில் (3—1—10ல்) *தேவர் தானவர் சென்று சென்றிறைஞ்சத் தண் திருவயிந்திரபுரத்து மேவு சோதியை* என்றவிடத்தைத் திருவயிந்திரபுரத்தில் ப்ரவசனம் செய்தவொரு காலக்ஷேபஸ்வாமியிடம் "தேவர்கள் சென்றிறைஞ்சுவது ஸம்பாவிதம்; தானவர்கள் [அசுரர்கள்] வந்திறைஞ்சுவர்களோ? இது ஸம்பாவிதமாக இல்லையே!என்று ஒரு சிஷ்யர் சொல்ல,அதற்கு அவ்வாசாரியர் சொன்னது — கீதாசார்யன் பகவத்கீதையில் தேவாஸுரவிபாகம்பண்ணியிருப்பது அறியாயோ? *த்வௌபூதஸர்க்கௌலோகேஸ்மிந் தைவ ஆஸுர ஏவச* இத்யாதி தெரியுமன்றோ? நம்மாழ்வார் *பொலிக பொலிகவில் *அரக்கரசுரர் பிறந்தீருள்ளீரேல்* என்றருளிச் செய்திருப்பதும் தெரியுமன்றோ? முன்பு தேவர்சென்றிறைஞ்சினர்கள். இப்போது தானவர் சென்றிறைஞ்சுகிறார்கள் மஹர்ஷிகள் பவிஷ்யத் கதநம் செய்வது போல் ஆழ்வார்களும் செய்தருள்வதுண்டே. நம்மாழ்வார் தாம் தலைவிபேச்சிலே *முன்னின்றாயென்று தோழிமார்களும் அன்னையரும் முனிதிர்* என்றார். அப்போது எங்கே முன்னின்றார்? திருவத்யயநோத்ஸவாதிகளில் ப்ரபந்த ஜனகூடஸ்தராய் முன்னிற்பதைப் பிற்காலத்தவர்களன்றோ காணப்பெறுகிறார்கள் அவ்வாழ்வார்தாமே தோழிபேச்சால் *உரைகொள் இன்மொழியாளை நீர் உமக்காசையின்றியசற்றினீர்* என்றார். உரைகொளின் மொழியாளென்றதற்கேற்ப அவருடைய[இன்மொழி எத்தனை உரைகளைக் கொண்டது தெரியுமோ? (உபதேசரத்தினமாலையில்) *இன்பமிகுமாறாயிரம். ஏரொன்பதினாயிரம். இருபத்து நாலாயிரம். ஈடு முப்பத்தாறாயிரம். ஏதமில் பன்னீராயிரமான உரைகளையன்றோ திருவாய்மொழி கொண்டது. இங்ஙனே பவிஷ்யத் ஸூசனங்கள் பலபலவுமுண்டே இவ்வகையில் சேர்ந்தது *தேவர் தானவர் சென்று சென்றிறைஞ்சத் தண் திருவயிந்திரபுரத்தென்றதும்.—இத்தகைய அர்த்தவிசேஷங்களை நம் அட்வகேட் K. N. ஒரு வியாஜ விசேஷத்தினுல் அறியப் பெறுவது பரம பாக்ய விசேஷமென்னத் தட்டுண்டோ?

அட்வகேட் தனது முன்னுரையில் தான் தன் சுவடியில் நாற்பதுக்கு மேற்பட்ட விஷயங்களை யெழுதியிருப்பதாகவும் மூன்று விஷயங்களுக்கே விடை கிடைத்ததாகவும் எழுதுகிறார். இந்தக் குறையைத் தீர்க்கவேண்டியது அவசியமே. எந்தெந்த விஷயங்களுக்கு விடை கிடைக்கவில்லையோ. அந்த விஷயங்களை (ஆங்கிலத்திலன்றிக்கே) சுத்தமான தமிழில் அச்சிட்டு வெளியிடட்டும். *நஞ்சுடைமைதானறிந்து நாகங் கரந்துறையும்* என்றபடியல்லாமல் முன்னம் நமக்கு அனுப்பட்டும். *ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யேவசநம்தவ* என்னப்பண்ணுவேனென்பதுதிண்ணம்.

அபத்ரபையை அறவேவிட்டு எழுதுகிறார்—தத்வடீகையில் ஸ்வாமி தேசிகன் எழுதியது மிகவும் அஸமஞ்ஜஸம் என்று D. T தாதாசாரியர் எழுதியது பூர்வபக்ஷமாகச் சொன்னதேயாம்; அதை கபிஸ்தலம் வித்வான் ஸித்தாந்தமாக ப்ரமித்து

விட்டாராம். தத்வடீகாகாரரான தேசிகனை நோக்கி D. T. தாதாசாரியர் பூர்வபக்ஷம் பண்ணியிருக்கிறாரே யொழிய ஸித்தாந்தமாக ஒன்றும் எழுதிவிடவில்லை யென்கிறார் அட்வகேட். மதுராந்தகரும் இவரோடு தாளம் போடுகிறார். அந்த விஷயம் இன்னதென்பதை இருவருமறியாரந்தோ? இருபத்தொரு வருடங்களில் திக்குமுக்கலாடிக் கிடந்தாரவர் என்பதை அறிபுமுலகெல்லாம். அலம் ஸவஸ்ரீரப்ரஹரணேந. இவர்கள் வல்லவர்களேல் தமிழறிஞர்கட்கு அந்தப் பூர்வபக்ஷத்தை விளக்கிக்காட்டலாமே.

அட்வகேட் (பாரா 5ல்) ''இதற்குள் மற்றொருவேடிக்கை தோன்றியது'' என்று தொடங்கி ஓர் இந்திரஜாலம் காட்டுகிறார். ஸ்ரீமதுபயவே. ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சந பத்ராதிப ஸ்வாமியை உத்தேசித்தே இவர் தத்தகபித்தக தாலேலோ பாடுகிறார் என்பது ஸ்பஷ்டமாகிறது. சந்த்ராலோகத்தில் லக்ஷ்யச்லோகமொன்று; 'பக்ஷ்யாசயா அஹிமஞ்ஜூஷாம் தஷ்ட்வா ஆகுஸ் தேந பக்ஷித:' என்று. ஒரு பிரப்பங் கூடையினுள்ளே ஸர்ப்பம் கிடக்கிறது. மேலே மூடியிருக்கிறது. அக் கூடையினுள்ளே ஏதோ பக்ஷணமிருப்பதாக நினைத்த ஓர் எலி கூடையைக் கடித்து உள்ளேபுக்கு ஸர்ப்பத்தின் வாயில் மாண்டொழிந்ததாம். ''விதி மாண்டால் விரியங்கத்திரி'' என்றொரு பழமொழியுமுண்டு. இவையே நமக்கு நினைவுக்கு வருகின்றன. ''எத்தேவர் வாலாட்டும் எவ்வாறு செய்கையும் அப்போதொழியு மழைப்பு'' என்கிற திருமழிசைப் பிரான் பாசுரமும் நினைவுக்கு வருகிறது. இவருடைய பொய்யுரைகளை ஸுதர்சனாழ்வான் தகர்த்திடுவர். இதுவரை தகர்த்தருளியாயிருக்கும்.

அட்வொகேட் (பாரா 4ல்) டாக்டர் ராமனைப்பற்றியெழுதுகையில் ''ஸ்ரீகாஞ்சிவரத ராஜப்பெருமாள் ஸன்னிதி தென்கலையே யென்று ஸ்தாபிக்க வெண்ணி ''...இத்யாதி' எழுதுகிறார். பேஷ் பேஷ்! ''விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை எம்பெருமானார் காத்தருளினதாக ஸ்தாபிக்க வெண்ணி'' என்னுமாபோலே யிருந்தது இது. எந்த ஸன்னிதியையும் ஒருநாளும் எட்டிப்பாராத இவர்க்கு ஒருமருமம் உணர்த்துகிறோம். ஒரு புருஷனைச் சுட்டி 'இவர் தென்கலை (அல்லது) வடகலை' என்றால் அவரணியும் புண்ட்ரத்தைக் கொண்டு அங்ஙனே சொன்னதாகக் கொள்ளலாம். ஒரு கோவிலைத் தென்கலை யென்றோ வடகலை யென்றோ சொல்லவேணுமானால் தென்கலையாசாரியர்களின் வழிபாடுள்ள கோவிலைத் தென்கலைக் கோவிலென்றும், அங்ஙனல்லாததை வடகலைக் கோவிலென்றும் சொல்லவேணும். நாச்சியார் கோவிலென்கிற திருநறையூரில் நூற்றுக்கணக்கான தென்கலைத் திருமண்காப்புகள் ஜொலிக்கின்றன. ஆனால் அங்கு இந்த நூற்றாண்டின் முதலில் வழிபாட்டில் மாறுபாடுநேர்ந்து விட்டது அதிலிருந்து அக்கோவிலைத் தென்கலைக் கோவிலென்று ப்ராமாணிகர் பகரார். காஞ்சீபுரம் தேவப் பெருமாள் ஸன்னிதியிலோ தீபப்ரகாச—தேசிக ஸந்நிதியிலோ இந்த அட்வகேட் கண்டறிந்த 1802க்குப் பிறகு புண்ட்ரம் மாறியிருந்தாலும் வழிபாட்டில் ஒரு குறையுமின்மையால் அவ்விரண்டும் வடகலைத்தலமாகாது தேவப்பெருமாள் ஸன்னிதியிலும், சுண்ணாம்பாலும் காவியாலுமிழைத்த நாமங்கள் அட்வகேட் உகக்கும் நாமங்களே தவிர, கருங்கல்லிலான புண்ட்ரங்களெல்லாம் தென்கலையே யென்பதைக் கட்கூடாகக் காணலாம் டாக்டர். ராமன்ஸ்வாமி அவற்றையெல்லாம் பரசுரப்படுத்தினது காரணமாகத்தானே அட்வகேட் அடிவயிறெரிந்து கிளம்பினது.

(முன்னுரை பாரா 4 ல்) அட்வகேட் எழுதுகிறார்—"தத்வார்த்த நிரூபண க்ரந்தம் உண்மையை விளக்குவதற்காகத் தோன்றியதன்று; என்னைக் கொழுத்த வடகலையபிமானியென்று காட்டவும் என்னைத் திட்டவுமே தோன்றியது" என்று. ஐயோ பாவமே! தன்னைக் கொழுத்த வடகலையபிமானியென்று காட்டுவார் திறத்திலே நன்றி பாராட்டுவதன்றோ இவர்க்கு உற்றது. ஒரு ஸ்ரீவைஷ்ணவர் ஒரு சைவ ப்ரபுவினிடத்திலே தானம் பெறச் செல்ல, 'நீர் ஸ்ரீவைஷ்ணவராகையாலே உமக்குக் கொடேன்' என்று அவன் சொல்ல, அதற்காக அவர் ஆனந்த ஸீம்நி நின்று குணலமாடினபடியைக் கேட்டறியீரே! வடகலையபிமானி யென்று தம்மைச் சொல்லுவதை இன்ஸல்டாக நினைக்கு மிவ்வட்வகேட் தன்னைத் தென்கலையபிமானி யென்னவேணுமென்று ஆசைப் படுகிறார்போலும். கபிஸ்தலம் ஸ்வாமி, தன்னை மிகமிகத் திட்டியிருப்பதாக அட்வகேட் எழுதியிருப்பது பலபொய்களிலே தலையான பொய்யாகும் பதில் சொல்ல முடியாதபடி விஷயங்களை வரைந்தால் திட்டுகிறார், நிந்திக்கிறார், தூஷிக்கிறார், என்று சொல்லாமல் வேறு என்ன சொல்லமுடியும்? என்ன எழுதமுடியுமிவர்களால்.

அட்வகேட் கடைசியாக எழுதுகிறார்—கபிஸ்தலம் ஸ்வாமியின் தத்வார்த்த நிரூபணம் கிடைத்த இரண்டு நாட்களுக்குள் மதுராந்தகம் பண்டிதர் ஸ்ரீரங்க ஸ்ரீவிவேசன மென்கிற மறுப்பையெழுதித் தன்னிட மனுப்பிவிட்டாராம்; அதைவெளியிடுவதற்குத் தன்னால் தாமதமாய்விட்டதாம். இப்போது பதினோராவது மீ வெளியிட்டு விட்டாராம். இதனால் பல அஜ்ஞாநாந்தகாரங்கள் ஒழிக்கப்படுமாம். இந்த வார்த்தையொன்றுதான் உண்மையமனது. இந்த நமது நூலினால் இவர்களுடையவும், இவர்களைச் சார்ந்தவர்களுடையவும் பலபல அஜ்ஞானாந்தகாரங்கள் தொலைவதற்கு அது ஹேதுவாய் நின்றபடியால் அதைத் தெரிவித்தாராயிற்று. அந்த விவேசனச் சுவடி படுகிறபாடு பாரீர் K.N.S. பெரியீர்!

அட்வகேட்டுக்கு, முடிவில் ஒரு ஸதுபதேசம். ஸ்ரீதேசிகனுடைய எழுநூற்றாண்டு நிறைவு விழா கொண்டாடின பெரியார்கள் அந்த விழாவுக்கு நீடுழி ஞாபகசின்னமாக இரண்டு நூல்களை வெளியிட்டிருக்கிறார்கள் (1) ஸ்ரீதேசிகன் அருளிச்செய்த டீகா ஸஹித தத்வார்த்தரத்னாவலி. (2) த்விதீயப்ரம்மதந்த்ர ஸ்வாமியருளிய தேசிக வைபவம். இந்தவைபவநூலை வடமொழியிலும் ஆங்கிலமொழியிலும் மொழிபெயர்த்தும் அச்சிட்டிருக்கிறார்கள் தமிழிலும் ஆங்கிலத்திலும் ஏற்கனவே நீர் படித்திருப்பீர். அதில் (தமிழில்) பக்கம் 30, 31ல் (அத்வைதி மஹாகவியொருவன் தேசிகனோடு போட்டியிட்டுத் தோற்று ஸ்ரீவைஷ்ணவனாகி ஸ்வாமி திருமாளிகையிலேயே கிங்கரனாயிருந்துகொண்டு ஸ்வாமியின் ஸகல வைபவங்களையுங் கேட்டறிந்து ஓர் அஷ்டோத்த சதநாமாவளியைக்கவிபண்ணி ஸதஸ்ஸிலே விஜ்ஞாபித்ததாக எழுதி) அந்த 108 நாமாவலி அச்சிடப்பட்டிருக்கிறது. அந்த நாமாவளிஸ்துதி வருமாறு;—

காஞ்சீஹிமவநோத்பந்ந: விச்வாமித்ராந்வயோதித:
அநந்தஸூரிதநயஸ் தோதாரம்போதரோத்பவ:
விஷ்ணுகண்டாம்சஸஞ்ஜாத: சுக்லஹாயநஸம்பவ:
கந்யாமாஸஸமுத்பந்ந: ச்ரவணர்க்ஷஸமுத்பவ:
ஸ்ரீவேங்கடேசநாமாட்ய: வேதாந்தோபாதிபூஷித:,

தீபப்ரகாசஸ்துதிக்ருத் ஹஸ்த்யத்ரீசஸ்தவோத்ஸுக:,
ராமாநுஜார்யஸச்சிஷ்ய: ரதார்யசடாக்ஷித:
உபாஸிதஹயக்ரீவ: ஸாக்ஷாத்க்ருதககேச்வர:,
அஹீந்த்ரநகரீவாஸீ கருத்மத்ஸரிதாப்லுத:
ஔஷதாத்ரிக்ருதாவாஸ: சாந்திதாந்த்யாதிபூஷித:
யதோக்தகாரிஸப்ஸ்தோதா ஸ்துதாஷ்டபுஜதைவத:
காமாஸிகாஹரிஸ்தோதா த்ரிவிக்ரமநிஷேவண:
ஸ்ரீஸ்துதிஸ்துததேவீக: ப்ரஹ்மசாரிதநப்ரத:
ஜடாயுக்ஷேத்ரஸமஸேவீ பரமார்த்தஸ்துதிப்ரத:
தேஹளீச்வரஸமஸ்தோதா பிநாகிந்யாபகாபலுத:
ஸ்ரீரங்கக்ஷேத்ரவாஸேச்சு: வாணீதீரவிஹாரக்ருத்
ரங்கநாதவிபச்ச்ரோதா மஹாக்லேசாபதிமக்நஹ்ருத்
அபீதிஸ்தவநிர்மாதா பீதிநாசபரஹ்ருஷ்டஹ்ருத்
ஸ்ரீரங்கநகராகந்தா காவேரீஸ்நானபாவந:
கோயிலாத்தான்ஸுதச்சாத்ரோ த்ராவிடாம்நாயகோவித:
புண்ணிஸ்வாமிஸத்பக்த: விசுத்தஜ்ஞானசேவதி:
வித்வத்ஸேவாவிசுத்தாத்மா விச்வவித்யாவிசாரத:
குப்யச்சோளீவச:க்கின்ன: பகவத்த்யானநிஷ்டித:
தசாவதாரஸம்ஸ்தோதா பாதுகாஸ்துதிதக்ஷிண:
த்ரமிடோபநிஷத்பாவவக்தா விச்ருதவைபவ:
மீமாம்ஸாபாதுகாகர்த்தா தத்வடீகாப்ரபந்தக்ருத
க்ருதஸேச்வரமீமாம்ஸ: கருத்மத்தண்டகப்ரத:
சடகோபமுநிஸ்தோதா ஸரோயோகிபதாச்ரித:
பூதயோகிபதாஸக்த: மஹதாஹ்வயமண்டந:
பக்திஸாரமஹாபக்த: குலசேகரவாக்ப்ரிய:
பட்டநாதோக்திஸம்ஸக்த: மங்களாசாஸனப்ரிய:
கோதாகுணகணஸ்தோதா பக்தபத்ரேணுசிந்தக:
முநிவாஹநஸத்பக்த: முநிவாஹநபோகக்ருத்
முநிவாஹநஸூக்திஜ்ஞ: முநிவாஹநபூஜக:
வீதகல்மஷஸத்புத்திஸ் ஸாதுஸேவீ (70) ஸுசிக்ஷித:
ஸாத்விகஸ் ஸத்பதஸ்தாதா ஸாரஜ்ஞஸ் ஸாதுஸேவித:
கஹநார்த்தபரித்ராதா கர்ப்பாதாநபராங்முக:
மந்த்ரஜ்ஞோ மந்த்ரரத்னஜ்ஞோ மநீஷீ (80) மாந்யமாநித8
லோகாசார்யபதாஸக்தோ லோகதேசிகஸூக்திபுக்
க்ருஷ்ணஸூரிகுணாம்போதிமக்ந: க்ருஷ்ணார்யஸேவக:
ஸ்ரீவாக்பூஷணதத்வஜ்ஞ: ஸம்சோதிதமதிஸ் ஸுதீ:
ஸதாசார்யபதாஸக்தஸ் ஸச்சிஷ்யகணஸேவித: 90
தார்க்கிகேந்த்ர: கவிச்ரேஷ்ட: கமநீயதநு: படு:
கம்பீராக்ருதிரம்போஜமாலாபூஷிதவிக்ரஹ:,

ஸ்ரீவிஷ்ணுசித்தவாக்பக்த: க்ருஷ்ணஸூரீந்த்ரவாக்படு:
லோகாசார்யவசஸ்த்ராதா வ்யாஸார்யோக்திவிசாரத: 100
வித்யோதந்வாந் விசுத்தாத்மா விநீதோ வீதகல்மஷ:
ஸர்வஜ்ஞஸ் ஸர்வசாஸ்த்ரஜ்ஞஸ் ஸநாசார்யஸ் ஸுசோபந:
அஷ்டோத்தரசதம் நாம்நாம் வேங்கடேசவிபச்சித:
பக்த்யா நித்யமநுத்யாயந் முமுக்ஷுர் முச்யதே பவாத்'' என்பதாம்.

## இந்தஅஷ்டோத்தரசதநாமாவளியை அரங்கேற்றுதலும் செய்தார்களாம்

இந்த நாமாவளியை ஸ்வாமி தேசிகன் போரவுகந்தருளி நம் ஸ்ரீ பாஷ்யகாரருக்கு அஷ்டோத்தரசத பாசுரங்கள் அமைந்தது போல அடியேனுக்கு இது அமைந்தது பரமபாக்யமேயென்று சொல்லி இந்த நாமாவளியை ஸ்ரீரங்கநாதன் திருவோலக்கத்திலே அரங்கேற்ற வேணுமென்று நியமித்தருள. அப்படியே சிஷ்யர்களெல்லாரும் தேசிகனைப் புரஸ்கரித்துக் கொண்டு ஸந்நிதிக்குச் சென்று ஸ்ரீகார்யதுரந்தரரைக் கொண்டு அந்த நாமாவளியை நம்பெருமாள் திருச்செவிசாத்தும்படி பண்ணி ஸ்வாமிக்குத் திருமாலை திருப்பரிவட்டம் சாத்துப்படி சுருளமுது பகுமானம் செய்து, ஸ்வாமியின் பிரார்த்தனையினால் அந்த மஹாகவிக்கும் இந்த பஹுமானத்தைச் செய்வித்தாச்சுது. ஸ்ரீரங்கவாஸிகளான ஸ்ரீவைஷ்ணவர்கள் பெண்டுகள் பேதைகள் எல்லாரும் இந்த நாமாவளியை நித்யபாராயணம் செய்து உஜ்ஜீவிக்கவேண்டியதென்று அர்ச்சகமுகேந நியமனம் பெற்று அனைவரும் ஸ்வாமியோடு மீண்டுவந்தாச்சுது என்றுள்ளது.

அட்வகேட் ஐயங்கார் உண்மையான தேசிகபக்தியுள்ளவரானால் இந்த அஷ்டோத்தரசதநாமஸ்துதியை நித்தியமும் ஒருதடவையாவது அநுஸந்தித்தே தீருவர். வேதத்தில் *தேவாஸுராஸ் ஸம்யத்தா ஆஸந்* என்கிற வாக்கியம் பலகால்வரும். சிலவிடங்களில் *தே தேவா விஜயமுபயந்த:* என்றாப்போலே தேவர்களின் விஜயப்ரஸ்தாவம் வரும்; சில விடங்களில் *தே தேவா: பராஜிக்யாநா:* என்றாப்போலே தேவர்களின் பராஜயப்ரஸ்தாவமும் வரும். விஜயப்ரஸ்தாவம் வருமிடங்களில் பாராயண கோஷ்டியார் உச்சஸ்வரத்துடன் ஓதுவர்கள். பராஜய ப்ரஸ்தாவம் வருமிடத்து திடீரென்று குரலைத்தாழ்த்தி, சொல்லுகிற சப்தம் ஒருவர்காதிலும் விழாதபடி அதரஸ்பந்தமாத்ரமாக [உபாம்சுவாக] ஓதுவர்கள். பாராயணம் நின்றுவிட்டதென்றே பலரும் நினைக்கும் படியாயிருக்கும். கோஷ்டிமுன்னே போகிற ச்ரோதாக்கள் இந்த மருமமறியாமல் ''காண்டம் முடிந்துவிட்டபடியாலே சற்று நிறுத்தியிருக்கிறார்கள்'' என்றுகூடப் பரஸ்பரம் சொல்லிக்கொள்வர்கள். அதேபோல அட்வகேட் அந்த அஷ்டோத்தரசத நாமஸ்துதியில் தனக்கு அநபிமதமான நாமங்கள் வருமிடங்களில் உபாம்சுவாகச் சொல்லிவருகிறார் போலும். இதுநிற்க. தத்வார்த்த ரத்நாவளியென்கிற தேசிகக்ரந்தம் உத்துங்க வித்வத் ப்ரகாண்டைக போக்யமான உத்க்ரந்தமாகையாலே அதை இவர் ஸ்ரீ. வாகம்ருதவர்ஷி வேளுக்குடிஸ்வாமிபோல் வாரான மஹான்களிடத்திலேயேபாடம்கேட்டாகவேணும்.ஸ்ரீஉ.வே.ஸதாபிஷேகம்ஸ்வாமியிடமும் வாசிக்கலாம்

அந்த ரத்நாவளியில் நூற்று நாற்பத்திரண்டு சுலோகங்கள் ஆச்சரியமாய் அமைந்துள்ளன. அதிகாரங்கள் ஆறு. முதலில் நான்காவது சுலோகம் அத்யந்த ரமணீயம். அதில் என்னஸாதிக்கிறாரென்னில்;

*நிர்விஷ்டம் யதி ஸார்வபௌம வசஸாமித்யாதிச் லோகத்தில்* அஸ்தாம் கர்வோபி நிர்வாபித: என்பதனுல் தெரிவிக்கப்பட்ட அஸத்கர்வநிர்வாடணத்தை ஸுஸ்பஷ்டமாய்த் தெரிவிப்பதற்காக ஸதாசார்ய நியமனமடியாக இந்தரத்நாவளி இயற்றப்படுகிறது—என்பதாம்.

மேலே ஏழாவது சுலோகத்தில் ஸாதிப்பதாவது-இப்போது நான் புதிதாக ஓர் அர்த்தமும் சொல்லுகின்றிலேன். நான் முன்னம் இயற்றிய பற்பலநூல்களில் உள்ள உண்மைப் பொருள்களில் கலக்கங்கொண்டவர்களின் மனத்தைத் தெளிவிக்கப் போகிறேனத்தனை—என்று. அப்பப்ப! சுலோகங்கள் எப்படிப்பட்டவை! எத்தனை வ்ருத்தங்களுண்டோ, அத்தனையுமுள்ளன. பாதுகாஸஹஸ்ரத்தை வென்றிருப்பதென்னலாம்; ஸ்வாமி தேசிகன் தாமும் மீண்டும் இப்படியொரு க்ரந்தமருளிச் செய்ய வல்லரல்லர் என்னலாம். எட்டாவது சுலோகம் முதல் நாற்பத்து நான்காம் சுலோசமளவு முள்ள முதலதிகாரத்தில் பகவத்க்ருபாப்ரபாவம் அற்புதமாக அநுக்ரஹிக்கப்பட்டது. நாற்பத்தைந்தாவது சுலோகம் முதல் எழுபத்தைந்தாவது சுலோகமளவான இரண்டாமதிகாரத்தில் பரகதஸ்வீகார ப்ராமாஸ்த்யம் ப்ரதிஷ்டாபிதமாயிற்று. எழுபத்தாருவது சுலோகம்முதல் நூருவது சுலோகமளவான மூன்ருமதிகாரத்தில் ப்ரபத்தியின் அநுபாயத்வம் ப்ரதிஷ்டாபிதமாயிற்று. அதற்குமேல் ஐந்து சுலோகங்கொண்ட நான்காமதிகாரத்தில் ப்ரபத்த்யநுஷ்டாநம் ஶோதிதமாயிற்று. அதன்மேல் பதினேழு சுலோகங்கள் கொண்ட ஐந்தாமதி காரத்தினுல் பிராட்டியின் அநுபாயத்வம் ஸாதித்தாயிற்று.

அதற்குமேல் *பகவல்லோகாசார்ய ஸ்ரீசரணத்யாந நிஹதகலுஷேண, ஸ்ரீவேங்கடேஶஸுதியா ப்ராமாதிக தோஷ நிஷ்க்ருதி: க்ரியதே.* என்றுதொடங்கி* *யேஷுயேஷு விஷயேஷ்வநு தாபோ மாமகே ஹ்ருதி பூவ விசிஷ்ய, தாந் க்ரமேண விஶதம் விவரீதும் காமயே ஹ்ருதய ஶாந்திமபீப்ஸந்* என்பதளவான இருபத்தொரு சுலோகங்கொண்ட ஆருமதிகாரம் ஸ்வாத்மநிர்வேத நிவேதநாதிகாரமாக அமைக்கப்பட்டுள்ளது. அதற்குமேல் க்ரந்தம் உபலப்தமாகவில்லையென்று தெரிகிறது *யேஷு யேஷு* என்கிற கடைசியாகக் காணும் சுலோகத்தில் *தாந் க்ரமேண விஶதம் விவரீதும் காமயே* என்றிருப்பதனுல் ரத்நாவளீ க்ரந்தம் ஸாவசேஷமென்று தெரியவருகிறது

அட்வகேட் ஸ்வாமிந்! மதுராந்தகருடைய அபத்தச்சுவடியை நீர் கொண்டாடுவதும், வேம்பின் சுவையை வாயஸம் கொண்டாடுவதும் பர்யாயமேயாகும். *சித்ரம் சித்ரம் பதபத! மஹச்சித்ரமேதத் விசித்ரம்* என்கிற குவலயாநந்த ச்லோகத்தையே நினைவூட்டுகிறது. முன்போல் இப்போதும் பதினெரு மாதம் தாமதம் செய்யாமல் பத்துநாளில் பிராமாணிகமான விடையிறுத்து வீறுபெறுவீராக. ரத்நாவலீ சுலோகங்களை ரஸிக்கும் பாக்யசாலிகள் இல்லையேயென்பதுதான் பெரியகுறை. முடிவாக வொன்றுகேளும். வெளிவந்துள்ள ரத்நாவலீ சுலோகங்களிலுள்ள அர்த்தங்கள் அஸாதுவென்று தோன்றினுல் அஸாதுத்வத்தை அத்தகைய நூற்றைம்பது சுலோகங்கள் கொண்டே வெளியிட்டுப் பூர்த்திசெய்ய முயல்வீராக. ... ... *

ஸ்ரீ:
ஸ்ரீஹஸ்திசைலசிகரோஜ்ஜ்வலபாரிஜாதாய நம:
ஸ்ரீபராங்குசபரகாலயதிவரவரவரமுநிப்யோ நம:

# ஸ்ரீரங்கலக்ஷ்மீ ஸாம்ராஜ்யம்

ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் மஹாவித்வான் **அண்ணங்கராசாரியர்** எழுதியது.

(ச்லோ ) மதுராந்தகமித்ரஸ்ய மநச்சோக நிவ்ருத்தயே,
ஸ்ரீரங்கலக்ஷ்மீஸாம்ராஜ்யக்ருதிரேஷாऽவதார்யதே.
சோகச் சாம்யது மித்ரஸ்ய நாநாஸத்யார்த்தவேதநாத்,
க்ருதஜ்ஞதாநுஸந்தாநாத் ப்ரஹ்மாநந்தஸ் ஸமேததாம்.

ஸஹ்ருதய ஸுஹ்ருந்மணி ஸ்வாமிந்! தேவரீருடைய ஸ்ரீரங்க ஸ்ரீவிவேசனச் சுவடியைக் கையில் கொண்டு விஜ்ஞாபிக்கிறேன். அடியேனை தேவரீர் மித்திரனுக மட்டும் கொள்ளாமல் உபகாரசனுகவும் பரமோபகாரகனுகவுங்கொண்டருளவேணும். தேவரீருக்கு அடியேனுல் ஆகக்கூடிய உபகாரம் அர்த்தங்களில் தெளிவை யுண்டாக்குவதும், சப்த ஸ்வரூபங்களின் உண்மையை உத்போதனம் செய்வதுமாம். இவ்விரண்டில் பிந்தினதை முக்கியமாகக் கொண்டிருக்கிறேன் சப்தஸ்வருபங்களில் பெரும்பாலும் விபரீதவுணர்ச்சி கொண்டிருக்கிறவர்களுக்கு மருளைப் போக்கித் தெருளை விளைப்பது அடியேனுக்கு இளமையிலிருந்தே இயற்கையாய் விட்டது. மருள் என்பது அடியேனுக்கும் ஸம்பாவிதமாதலால் தேவரீர்போல்வார் அடியேனுக்கும் உபகரிக்கலாம். ஆனுல் அந்த பாக்கியம் தேவரீருக்கு இல்லையேயென வருந்துகிறேன். நிற்க.

வடமொழியில் ப்ரஸ்தாவம் என்னுஞ்சொல் ப்ரஸித்தமானது அதை யதாஜாதர்கள் ப்ரஸ்தாபம் என்று வழங்கியும் எழுதியும் வித்வான்களுக்கு மநஸ்தாபத்தை விளைவிக்கின்றனர். தேவரீர் ஏதோ வாசித்தவராதலால் தேவரீரும் அந்த அபத்தத்தை எழுதுவது உசிதமன்று: [இது. முதல்பாராவில்.] இனி இரண்டாம் பாராவில்– ''அடியேனை நியமித்துள்ளார்'' என்பது அபஹாஸ்யம் நியமித்தவர் காலஞ்சென்று பல நாளாயிற்று. நியமன நிர்வர்த்தனமும் இருபத்தைந்து வருஷங்களாக இல்லை. இந்த நிலைமைக்குச் சேர (நியமித்திருந்தார்) என்றெழுதவேணும். நியமித்துள்ளார் என்றதற்கு-நியமித்திருக்கிருர் என்று பொருளேயன்றி இறந்தகாலப்பொருள் அஸம்பாவிதம். மேலே ''எழுதியுள்ளேன்'' என்றது ஸாதுவே; தேவரீர் வாழ்ந்திருப்பதால். மேல் அத்யந்தசோசநீயம்கேளீர். ப்ரஹ்மத்தை ப்ரும்மம் என்றே பலவாண்டுகள் எழுதிவந்தவர் சேட்லூர் நரஸிம்ஹாார்யர். அவர்க்கு நானெழுதின மறுப்பு நூல்களெல்லாம் தேவரீர் திருமாளிகையில் கோயிலாழ்வாரில் இற்றைச்கும் எற்றைக்கும் விளங்குவன ப்ரும்மம் என்று ருகரம் வருவதற்கு ப்ரஸக்தியேயில்லை. இராமாநுச நூற்றந்தாதியில் *பிரமம் நன்றென்ருேதி* என்றிருப்பது காதில் விழுந்திருக்கலாமே. மற்ருேரிடத்தில் ப்ரம்ஹம் என்றெழுதியுள்ளீர். இதில் அநுஸ்வாரப்ரஸக்தி ஏதய்யா!.

அவஸானத்தில் (பக்கம் 22ல்) *ஓதி ஓதி வைத்தாதியாய் வருமவர் வடகலையார்—என்றெழுதியுள்ளீர். அருளிச்செயலை இப்படியும் கொலை செய்வாருளரோ? இவ்வபத்தத்தை நீர் யாரிடமோதினீர்? இத்தகைய சிக்ஷணங்களை விட்டிடுவோம்.

ஸ்வாமிந்! தேவரீர் அக்ஷராஸ்யராகையால் அருமையாக எழுதத் தொடங்கின சுவடியில் பண்டிதர்கள் பரமானந்தமாகக்கண்டு உகக்கும்படியான அர்த்த விசேஷங்களை அமைத்து கம்பீரமான ஸரணியில் பூப்பறித்தாப்போலே யெழுதலாகாதா? ஐயோபாவமையங்கார் என்பதை இப்படியுமா நிலைநாட்டிக்கொள்ளவேணும்? முதலேட்டிலேயே கலைச் சண்டையைக் கிளப்பி "குப்புஸாமி வடகலை, கந்தஸாமி வடகலை, அருணாலம் வடகலை, திங்காலு வடகலை" என்னுமாபோலே காசுக்குதவாத வார்த்தைகளை நிரப்பியுள்ளீர். உபஸம்ஹாரத்தினழகோ, வாசாமகோசரம்—"47. "வேதாந்தாசார்ய ப்ரதிஷ்டை எங்கேயாவது செய்தால் நம் ஸங்கேதப்படி அதைத் தடைசெய்யவேண்டும் 48. முடியாவிடில் அந்த கிராமத்தை விட்டு அகலவேண்டும்.........இப்படி தென்கலையார் ஸித்தாந்தமாய். ......பாபிஷ்ட: என்று தொடங்கி பரிதப்யதே என்று தலைக்கட்டின சுவடியில் வாஸனையாலே இப்படிப்பட்ட அசட்டு வார்த்தைகளாலே சுவடியை நிரப்பியுள்ளீர். "பிசாசஸ்ய பிசாசபாஷயா வக்தவ்யமானாலும் நாம் நன்னெறிவிடாது உண்மைகளை வெளியிடுவோம். ஒரு வடகலை விதவைப்பெண் அக்ஷயபாத்ரம் கொண்டு ஜீவிப்பவள் "எனக்கு இளமையில் கணைக்கால் வரைக்கும் தொங்கும் கூந்தல்......" என்று சொல்லியழுவளாம். அப்படி இவரும் 'அது வடகலையாயிருந்தது, இது வடகலையாயிருந்தது' என்று சொல்லியழட்டும். அந்த விதந்துவுக்குக் கூந்தல் அப்படியிருந்தது மெய்யாயிருக்கலாம்; இவருடைய எழுத்தில் மெய்யென்பது லவலேசமுமில்லையே. உண்மையுரைகள் கேளீர்.

ஸ்ரீ:

# தேவாலயங்களும்-ஸம்ப்ரதாய விஜயமும்

## — ஸ்ரீமத் வரவரமுநிஸம்ப்ரதாயத்தின் தன்னேற்றம் —

திவ்யதேசங்களான விஷ்ணுவாலயங்களெல்லாம் அநாதிகாலமாக ஸ்ரீவரவரமுநி ஸம்ப்ரதாயமாகவே விளங்கிவருகின்றன வென்பதில் பிராமாணிகர்களுக்கு விவாதமிராது. சோழநாட்டில்மூன்றுநான்கு அல்லது ஐந்தாறு, நடுநாட்டில் ஒன்று, தொண்டைநாட்டில் இரண்டு மூன்று. ஆக பத்தெட்டு ஸ்தலங்கள் தவிர மற்ற ஸ்தலங்களெல்லாம் தென்கலையாகவே விளங்கிவருகின்றன. வடகலையாகக் காணும் சில திவ்ய தேசங்கள் விளங்கிவருகின்றன வடகலையாக்கப்பட்டன வென்பதிலும் யார்க்கும் ஸந்தேஹமிராது. சோழநாட்டில் கண்டியூரையும் தஞ்சை மாமணிக் கோயிலையும் தென்கலையாக ஸேவித்தவர்கள் நாளைக்கும் பல்லாயிரவர் உளர். அடியேனும் பலகால் ஸேவித்தவன். இவை வடகலையாக மாறினது அறுபது வருஷங்களுக்கு மேலிராது. திருக்குடந்தை திருவயிந்திரபுரம் திருவெவ்வுளூர் முதலிய திருப்பதிகள் மாறுபட்டு 80, 85 ஆண்டுகட்கு மேலே ஆய்விட்டதென்று வடகலையார்களே சொல்லுகிறார்கள் எப்படியானாலும் கி. பி. பத்தொன்பதாவது நூற்றாண்டின் பிற்பகுதியில்தான் இப்படி தேவாலயங்களில் திருமண்காப்பு மாறுபட ஆரம்பித்ததென்பது அனேக ஆதாரங்களால் ஊர்ஜிதமான விஷயம்.

நமது ஸ்ரீவைஷ்ணவஸம்பிரதாயத்தில் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் முக்கியமானவர்கள். இவ்வாழ்வாராசாரியர்களின் அவதார ஸ்தலங்களில் ஒன்று தப்பாமல் எல்லாம் தென்கலை ஸ்தானங்களாகவே நாளைக்கும் விளங்கிவருகின்றன. அந்த அடைவையும் கீழே சுருக்கமாகக் காட்டுகிறேன்:—

| (ஆழ்வார்கள்) | (அவதாரஸ்தலங்கள்) |
|---|---|
| 1. பொய்கையாழ்வார் | ஸ்ரீகாஞ்சீ யதோக்தகாரிஸன்னிதி |
| 2. பூதத்தாழ்வார் | திருக்கடல்மல்லை ஸன்னிதி |
| 3. பேயாழ்வார் | மயிலைப் பெருமாள் ஸன்னிதி |
| 4. திருமழிசையாழ்வார் | திருமழிசைப் பெருமாள் ஸன்னிதி |
| 5. நம்மாழ்வார் | திருக்குருகூர் ஸன்னிதி |
| 6. மதுரகவிகள் | திருக்கோளூர் ஸன்னிதி |
| 7. குலசேகராழ்வார் | (அவதாரஸ்தலம் ஒரு கலையாயுமில்லை) |
| 8. பெரியாழ்வார் | ஸ்ரீ வில்லிபுத்தூர் ஸன்னிதி |
| 9. தொண்டரடிப்பொடியாழ்வார் | திருமண்டங்குடி ஸன்னிதி |
| 10. திருப்பாணாழ்வார் | உறையூர் நாச்சியார் ஸன்னிதி |
| 11. திருமங்கையாழ்வார் | திருவாலி திருநகரி ஸன்னிதி |

ஆக ஆழ்வார்களின் அவதார ஸ்தலங்கள் யாவும் தென்கலை ஸ்தலங்களாக விளங்கிவருவதோடு இவற்றில் வேறுகலையின் ஸம்பந்தம் விவாதவிஷயமாகக்கூட இல்லை என்பது அனைவருமறிந்ததே

இனி ஆசாரியர்களின் அவதார ஸ்தலங்களைப்பற்றித் தெரிவிக்கிறேன். சில ஆசாரியர்களின் அவதார ஸ்தலங்கள் அப்ரஸித்தங்களும் விசேஷ வைபவமில்லாதவைகளுமாதலால் அவை விடப்படுகின்றன. ஆனால் அவை வேறுகலையாருடைய அதீனமல்லவேயல்ல என்பது மாத்திரம் ஞாபகத்திலிருக்கவேணும்.

| | |
|---|---|
| 1. ஸ்ரீமந்நாதமுனிகள் | காட்டுமன்னார் ஸன்னிதி |
| 2. ஆளவந்தார் | ஷெ |
| 3. திருக்கச்சிநம்பிகள் | பூவிருந்தவல்லி |
| 4. எம்பெருமானார் (உடையவர்) | ஸ்ரீபெரும்பூதூர் ஸன்னிதி |
| 5. எம்பார் | மழலைமங்கலம் ஸன்னிதி |
| 6. ஆழ்வான் | கூரம் ஸன்னிதி |
| 7. முதலியாண்டான் | பச்சைப் பெருமாள் கோவில் |
| 8. பட்டர் | திருவரங்கம் பெரியகோயில் |
| 9. நஞ்சீயர் | திருநாராயணபுரம் |
| 10. பிள்ளைலோகாசாரியர் | திருவரங்கம் பெரியகோயில் |
| 11. திருவாய்மொழிப்பிள்ளை | குந்தீநகரம் ஸன்னிதி |
| 12. மணவாளமாமுனிகள் | ஆழ்வார்திருநகரி |

இவ்வாசாரியர்கள் தவிர மற்ற ஆசாரியர்களுக்கு அவரவர்களின் அவதார ஸ்தலங்களில் ஸன்னிதி வைபவங்கள் இருப்பதாகத் தெரியாமையாலே அவற்றைப்

பற்றி இங்கு ப்ரஸ்தாவிக்கவில்லை. ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் ஸன்னிதி விஷயமாகத் தெரிவிக்கவேண்டியதிருப்புட்குழிஸ்வாமிவிஷமத்தைபலகால்தெரிவித்திருக்கின்றேன்.

எம்பெருமானார் தொடங்கி ஆசார்ய பரம்பரையானது இரண்டு வகுப்பாகப் பிரியலுற்றது. ஆழ்வான், முதலியாண்டான், எம்பார், பட்டர்—என்று நாம் இங்குத் தெரிவித்த ஆசாரியர்கள் ஒருவகுப்பைச் சேர்ந்தவர்கள். மற்றொரு வகுப்பைச்சேர்ந்த ஆசாரியர்களுக்கு அவதாரஸ்தலங்களில் அர்ச்சா விசேஷமிருப்பதாகத் தெரியவில்லை. இதர ஸன்னிதிகளிலும் அவ்வாசாரியர்களுக்கு ப்ரதிஷ்டாதிகள் இருப்பதாகத் தெரியவில்லை. ஆகவே அவர்களைப்பற்றி இங்கு எழுத வேண்டியதொன்றுமில்லை

ஆசாரியவகுப்பில் முக்கியமாகவொன்று தெரிவிக்க வேண்டியதுமுண்டு; அவர்களின் அவதார ஸ்தலங்களெல்லாம் தென்கலை ஸ்தலங்களாகவே நாளைக்கும் விளங்குகின்றனவென்பது மாத்திரமேயன்றிக்கே, அவர்களின் ஸந்ததியில் தோன்றினவர்கள் என்கிற காரணத்தினால் தத்வைச்யர்கள் பலர்க்கு ஸ்ரீரங்கம் முதலான ஸம்ப்ரஸித்த திவ்யதேசங்களில் விசேஷ மரியாதைகள் ஏற்பட்டிருக்கின்றன. அந்த மரியாதைகளைத் தொன்று தொட்டு அநுபவித்து வருகின்ற ஆசார்யபுருஷர்கள் பலரும் நாளைக்கும் தென்கலையாகவே விளங்கி வருகிறார்களென்பது ப்ரத்யக்ஷம். ஸ்ரீரங்கத்தில் இன்று நேற்று ஒருவரால் ஏற்படுத்த முடியாதபடிக்கும் "ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்" என்று தேசமெல்லாம் கொண்டாடும்படிக்கும் எம்பெருமானாருடைய திவ்யாஜ்ஞாஸித்தமாக விளங்கிவருகின்ற ஆசார்யபுருஷ மரியாதைகளை நாம் எடுத்துக்காட்ட வேண்டாதே ப்ரத்யக்ஷிக்கின்ற உலகத்திற்கு இங்கு விரிவுவேணுமோ? இதில்மதுராந்தகருடைய மாயப்பொய்யுரைகள்யாவும் மேலேமாயும்.

ஜீயர்களைப்பற்றியும் சிறிது தெரிவிக்கிறோம். ஸன்னிதிகளின் கைங்கர்ய நிர்வாஹத்திற்கென்றே ஆங்காங்கு மடாதிபதிகளாக விளங்கிவருகின்ற யதிகள் யாவரும் தென்கலையார்களே. வானமாமலை ஜீயர், திருக்குறுங்குடி ஜீயர், ஸ்ரீரங்கநாராயண ஜீயர், எம்பெருமானார் ஜீயர், திருமலை ஜீயர், அழகியமணவாள ஜீயர், திருமாலிருஞ்சோலை ஜீயர், யதிராஜ ஜீயர் என்றிங்ஙனே வழங்கிவரும் யதிவரர்களெல்லாரும் திவ்யதேச யோகக்ஷேம பரிபாலனத்திற்காகவே நியமனம் பெற்றவர்கள். இப்படி இதரகலையில் ஸந்நிதி பரிபாலனத்திற்கென்று ஒரு யதியும் நியமிக்கப்பட்டிருக்கவில்லை யென்பது ப்ரத்யக்ஷம். அன்னவர்கள் வாழுமிடமெல்லாம் ஆற்றங்கரையோரமாகவேயிருக்குமாதலால் ஆச்ரமதர்ம பரிபாலனார்த்தமாக அவர்கள் ஸந்ந்யஸித்து இருமுப்பொழுதேத்தும் பரமைகாந்திகளாக விளங்கிவருவது ஒருவிதமான பெருமையாகும். ப்ரக்ருதத்தில் திவ்யதேச பரிபாலனமே விஷயமாதலால் இந்தப் பெருமையையடைந்த ஜீயர்கள் தென்கலையார்களே. "பதியே பரவித்தொழும் தொண்டர் தமக்குக் கதியே* என்றும் *கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர்மல்லையென்று மண்டினாருயலல்லால் மற்றையார்க்கு உய்யலாமே? என்றும், *உன்கடைத்தலை யிருந்து வாழும் சோம்பரை யுகத்திபோலும் சூழ்புனலரங்கத்தானே* என்றும் ஆழ்வார்கள் பேசின பெருமையையும், "செங்கல்பொடிக் கூறை வெண்பல் தவத்தவர் தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்றார்" என்று ஆண்டாளுடைய மங்களாசாஸனத்தையும் பெற்றவர்கள் தென்கலை ஜீயர்களே யாவர். இதிலும் அந்தகருடைய மருளை மேலே தொலைப்போம். ... ... ... ... ●

# வித்வான்கள் விசேஷித்துக் குறிக்கொள்க.

ஸ்ரீமதுராந்தக பண்டிதர் திருக்கச்சிநம்பிகளைப் பற்றியெழுதிய அவத்தக் கட்டுரைக்கு நாமெழுதிய மறுப்பு நூலில்— "மதுராந்தகாசாரியர் ஏதோ சில புத்தகங்கள் வாசித்திருந்தாலும் ஐயோ! வ்யுத்பத்தியில்லையே! என்று சிலர் சொல்லிக்கொண்டிருப்பதுண்டு" என்று எழுதியிருப்பதைக் கண்டவொரு ஸ்ரீரங்க வாஸி ஸ்வாமி, 'தேவரீர் அநுவதிக்கிற வ்யுத்பத்திதாரித்ரியத்திற்கு அவரெழுத்தில் ஒரு சான்றுவது காட்டவேணுமே யென்றார். உடனே அவர் பரமத்ருப்தி யடையும்படி காட்டினேன். இப்போது இவர்கள் அச்சிட்ட வைரவிழா மலரில் "தேசிகனும் தர்ஶனமும்" என்று மகுடமிட்டு இப்பண்டிதரெழுதியுள்ள கட்டுரையில் முதல் வாக்கியம்— "ஸ்ரீரங்க திவ்யதம்பதிகளாலும் அடியார்களாலும் வேதாந்தாசார்யர் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர்--கவிதார்க்கிகஸிம்ஹம் என்று பிருது ப்ரதாச? பூர்வகமாய் பகவத்ராமாநுஜ தர்ஶநஸ்தாபக பதத்தில் மூர்த்தாபிஷேகம் பெற்ற தேசிகஸார்வ பௌமன்"--'என்பது. வ்யுத்பந்நர் இங்ஙனேயெழுத மாட்டார்கள். இங்குள்ள அநுபபத்தியை நாம் நிரூபித்துக் காட்டினாலும் இவராலும் இவரைப் போன்றவர்களாலும் லேசாகத் தெரிந்துகொள்ளவும் முடியாது, "நீ உண்டபிறகு நான் உண்ணவேணும்" என்று சொல்ல நினைத்தவன் "த்வம் புக்த்வா அஹம் போக்தவ்யம்" என்று வடமொழியில் கூறினால் எப்படி சிரிப்பர்களோ அப்படி சிரிப்பர்கள் இந்த வாக்கியத்திற்கு. யார்? *ஸாரம் து ஸாரஸ்வதம் ஜாநீதே நிதராமஸௌ குருகுலக்லிஷ்ட:* என்னுமாபோலேயிருப்பவர். *அப்திர் லங்கித ஏவ வாநரபடை:* இத்யாதிக்கு இலக்கானவர்கள் இங்கு விஷயம் இன்னதென்றே புரிந்துகொள்ளமாட்டார்கள். கேண்மின்;—

மேலே குறித்த வாக்கியத்தில் (பிருதுப்ரதாச) என்றிருப்பதை அச்சுப் பிழையாகவே கொண்டு (ப்ரதாந) என்றே வாசிப்போம். (பிருதுப்ரதாந பூர்வகமாய்) என்பதற்கு எங்கே அந்வயமென்று கேட்டால், "மூர்த்தாபிஷேகம்பெற்ற" என்றதில் அந்வயம் என்று சொல்லியாகவேணும். பிருதப்ரதானம் பண்ணினவர்கள் வேறு வ்யக்திகள். மூர்த்தாபிஷேகம் பெற்றவர் தேசிகஸார்வபௌமனாகிற வேறுவ்யக்தி. "திவ்ய தம்பதிகளாலும் பக்தர்களாலும் பிருதப்ரதாநபூர்வகமாய் மூர்த்தாபிஷிக்தராக்கப்பெற்ற" என்று எழுதத்தெரியாதது வ்யுத்பத்தி மாந்த்யாத். பண்டிதர் இந்த வாக்கியத்தை ஸாதுவென்று ஸமர்த்திக்க மூளையைப் பலவாறு குழப்பிக்கொள்ளுவர். பிருதப்ரதானபூர்வகமாய் என்றதை மாற்றினாலொழிய உய்யும் வகையில்லைகிடீர். "விருதளித்து" என்றெழுதியிருந்தாராகில் "சொல்திரியினும் பொருள்திரியாவினைக்குறை" என்ற நன்னூற்சூத்திரங்கொண்டு சிறிது சிகித்ஸை பண்ணலாம். அமெரிகாவிலிருந்து மஹாநிபுணனான ஸர்ஜன் வந்தாலும் போனவுயிரை மீட்கலாகுமோ? K·N.S. ஸ்வாமிந்!— இந்த வாக்யத்தை ஸம்ஸ்க்ருதப் படுத்தினால் "பிருதப்ரதாநபூர்வகம் அபிஷேகம் ப்ராப்தவாந்" என்ன வேணும்! வேறுவிதமாக மொழிபெயர்க்க முடியாதையா! "என்தாயார் ஆசார்யன் திருவடியடைந்தார்" என்றெழுத நினைத்து "என் ஆசாரியர் என் தாயார் திரு

வடிகளையடைந்தார்” என்றெழுதினவர்க்கு *கிம் கநிஷ்ட: கிமு ஜ்யேஷ்ட: ஶோயம் பண்டிததல்லஜ:?‘இதைப்பற்றி நீர் என்ன பண்ணக்கூடும்? அழக்கூடும்.

ஆரியர்களே! எனக்கு முக்கியமான உத்தேச்யம் தேசிக திவ்யஸூக்திகளில் இப்பண்டிதர்க்கு மருளுமிருளும் மலிந்திருக்கின்றதென்பதை உலகமுணர நிரூபிக்கவேணுமென்பதே. இந்த உத்தேச்யத்தைப் பூர்த்திசெய்துகொண்டு, உடனே ஸ்ரீரங்கலக்ஷ்மீஸாம்ராஜ்யமென்ற இந்நூலின் பெயர்க்குச்சேர எழுதவேண்டுமவற்றையெழுதுவோம். ஆனாலும் எதையும் விடமுடியவில்லையே!

இந்த ஸந்தர்ப்பத்தில் அடியேன் தெரிவிப்பதொன்று கேளீர்; இளமை தொடங்கி என்பால் ஸஹோதரன்போல் அன்பு பூண்டவனும், விவேகி வித்வான்களில் தலைவனாக என்னால் மெச்சப்பட்டவனும், ஏகவசனவ்யபதேசத்தையே என்பால் அன்போடு விரும்புபவனுமான ஒப்பிலியப்பன்ஸன்னிதி ஸ்ரீராமதேசிகன் அற்புதமாக எழுதிய “ஸ்ரீபாதுகையும் ஸ்ரீதேசிகனும்” என்கிற கட்டுரையொன்றே இப்புத்தகத்திற்கு அணிகலனாக விளங்குகின்றது. அத்யந்தஹ்ருத்யமான இந்தக் கட்டுரையிலுமன்றோ அச்சுப்பிழையைப் புகுவித்தனர். ஸ்ரீதேசிகன் ஸாதித்தருளின நியாஸவிம்ஶதியை நியாயவிம்ஶதியாக்கினர். இதை அச்சுப்பிழையென்றால் உண்மையாக உலகங்கொள்ளும். அச்சுக்கூடத்தில் எழுத்துக்கோப்பவர்களின்கையில் சேர்வதற்குமுந்தியே அச்சுப்பிழைகளும் ஹல்லுப்பிழைகளும் எண்ணிறந்து மலிந்த லேகனங்களிலேயே கை தேர்ந்தவர்களின் கட்டுரைகளில் காணும் பிழைகளை அச்சுப்பிழை (ப்ரிண்டிங் மிஸ்டேக்) என்றால் சிரிப்பர்கள் ப்ரஹ்ம என்கிற சொல்லின் ஸ்வரூபத்தைக்கூட உள்ளபடியறியாமல் ஓரிடத்தில் ப்ரும்மம் என்றும், மற்றோரிடத்தில் ப்ரம்ஹம் என்றும் எழுதிப்போருகிற நம் மதுராந்தகபண்டிதர் உண்மையில் நல்லவிவேகி; விவேகத்திற்குப் பலன் என்னவென்றால் தமக்கு ஆப்ததமரும் வித்யாநிதியும் ப்ரஜ்ஞாப்ராஸாதமுமான ஸ்ரீமதுபயவே. புத்தூர் அட்வகேட் ஸ்வாமி (ஸ்ரீவைஷ்ணவஸுதர்ஶந பத்ராதிபஸ்வாமி) யோடு சிறிதுகாலமாவது பழகினால் நிரவத்யஹ்ருத்ய லேகநகலையில் ப்ரவீணராகலாம். இப்படி நாமெழுதுவது இவர்க்கு இப்போது அஸஹ்யமானாலும் இது ஹிதோபதேஶமே.

வடமொழியில் விஸ்தாரம் என்று ஒரு பதம், விஸ்தரம் என்று ஒருபதம். இவையிரண்டும் பர்யாயமன்று. விஸ்தாரமென்கிற பதத்தை எங்கே பிரயோகிக்க வேண்டும்? விஸ்தரமென்கிற பதத்தை எங்கே பிரயோகிக்க வேண்டும்? என்பதை குருகுலக்லிஷ்டர்கள் அறிவர்கள். உண்மையான நையாயிகர்களும் அறிவர். குருகுலவைதேசிகர்கள் அறியப்ரஸக்தியே கிடையாது. ஆகவே தான் இப்பண்டிதர் ஸவிஸ்தாரமாக என்று எழுதியுள்ளார். ஶப்தஸ்வரூபத்திலும் அர்த்தஸ்வரூபத்திலும் இருளும் மருளுமே வடிவெடுத்த இவர் ஸ்ரீமதுபயவே புத்தூர் அட்வகேட் ஸ்வாமி ஸன்னிதியில் சிலகாலம் பழகியேயாகவேணும். பிராட்டி இராவணனிடம் *விதிதஸ் ஸஹி தர்மஜ்ஞ: சரணாகதவத்ஸல: என்று சொல்லி, உடனே (தம் சரணம் வ்ரஜ) என்னாதே (தேந மைத்ரீ பவது தே) என்றாள். அதை இங்கே நினைப்பது.

மதுராந்தக ஸுஹ்ருந்மணியே! தேவரீருடைய விவேசனத்தில் (இரண்டாவது பாராவில்) "1954 ஜய வருஷத்தில்" என்று தொடங்கி முப்பது மாதங்களுக்கு முன்பு மறைந்துபோன D. T. தாதாசாரியர் தமது ஸம்ப்ரதாய ப்ரதீபமென்கிற சுவடியில் [பகல் கோட்டைவிட்ட கதையாய்] உங்கள் ஸமூஹத்திற்குக் கால கூட விஷமாக எழுதிவிட்டு, அதைப்பற்றி உங்கள் வகுப்பினர் பலர் ஹாஹாகாரம் பண்ணியும் வாயைக் கையைத் திறவாதே காலங்கழித்தாரவர். அப்படி அவர் வாயைக்கையை மூடிக்கிடந்தது எத்தனை வருஷம் தெரியுமோ! இருபத்தொரு வருஷங்கட்குமேல். அந்த இருபத்தொரு வருஷங்களில் என் மூலமாகவும் பிறர் மூலமாகவும் எத்தனை புத்தகங்கள் வெளிவந்தன தெரியுமோ? தெரியாமலென்ன? திருமாளிகையில் கோயிலாழ்வாரைத் திறந்து பார்த்தால் எளிதாகத் தெரியுமே; அத்தனை புத்தகங்களிலும் [யேச த்வாமநுரீதியில்] தேவரீரையும் சுட்டிக்காட்டியே எழுதியுள்ளதென்பதையும் நன்கறிவீர். மதுராந்தக ஸூரி மஸ்தகாபரணம், மதுராந்தக வித்வச்சிரோபூஷா — என்றிப்படி தேவரீருக்கே ஏகதேச போக்யமாக - அஸாதாரணநுபாவ்யமாக அவதரித்துள்ள நூல்களையும் மறந்திருக்க ப்ரஸக்தியில்லை. இதுகாறும் ஒன்றுக்காவது வாயைக்கையைத் திறந்ததுண்டோ? ஏதோவொரு ஸமயம் நாலிரண்டுதுண்டு வெளியிட்டதாகவும், அதுவும் பிறப்பகத்தே மாண்டொழிந்ததாகவும் ஞாபகம். சர்ச்சிக்கப்படுகிற விஷயம் எதுவோ அதுபற்றி ஓரெழுத்து மெழுதுவதில்லை. இப்போது இந்த சர்ச்சையில் ஒரு அட்வகேட் ஸம்பந்தப்பட்டிருப்பதால் இனியாவது ஆர்ஜவத்தோடு விஷயவிசாரம் நடைபெறுமென்று நம்பியிருக்கிறேன். அட்வகேட் என்கிற பெயர் சிறிதாவது பொருத்தம் பெறலாகுமென்று ஆசை.

ஸ்வாமிந்! தேவரீரும் தேவரீர் வகுப்பினரும் "தேசிகன் தேசிகன் ஸ்வாமி தேசிகன் நம்மதேசிகன்" என்று வாய்வெருவுவது உலகமறிந்தது. இத்தகைய பக்தி விசேஷத்திற்கு ஏற்ப அவருடைய திவ்ய ஸூக்திகளில் ஒன்றையும் தள்ளாமல் ஓரெழுத்தையும் விடாமல் ஆதரிக்க வேண்டுவது உங்களது கடமையாகும். "இங்கே இப்படி ஸாதித்திருந்தாலும் மற்றோரிடத்தில் அப்படி ஸாதித்திருப்பதால் அது தான் ஆதரணீயம்" என்று சொல்லிவருகிறீர்கள். இதனால் பரஸ்பர விருத்த பாஷித்வமே ஊர்ஜிதமாகும். நம்மாழ்வார் எம்பெருமானை * சோம்பாது இப்பல்லுருவையெல்லாம் படர்வித்த வித்தா! * என்றழைக்கிறார். அப்பரமனுக்கும் சோம்பலில்லை, அடியேனுக்கும் சோம்பலில்லை. மனச்சாட்சிக்கு முரணாக ஓரெழுத்தும் எழுதமாட்டேன். தவறாக எழுதினேனாகில் *சேஷம் கோபேந பூரயேத்* பண்ணாமல் நிந்தாபரிஹாஸங்களில்லாமல் ஆசார்யன் சிஷ்யனைத் தெளிவிக்கிற ரீதியிலே தெளிவியுங்கள்.

<u>சகிக்கமுடியாத பிழைகள்.</u> வைரவிழாமலரில் காஞ்சீபுரம் தேவப்பெருமாள் திருவுருவப்படத்தை வெளியிட்டு அதன்கீழ் ஒருபாட்டை அபத்தக்களஞ்சியமாகப் பதிப்பித்துள்ளீர்கள். [உத்தமவமர்த்தலமென்பது பாட்டு] எழில்தனுவின் உய்த்தகணையால் என்பதை (எழில்தனுவுயர்த்தகணையால்) என்று அச்சிட்டது அபத்தம். அமலனாதிபிரானில் (4) *ஓர் வெங்கணையுய்த்தவன்.* மேல் இரண்டாமடியில், [அரக்கன் முடிபத்து மொருகொத்தென] என்பது (அரக்கன் முடிபத்து

மென கொத்தாரு) என்றுள்ளது. இது என்னபாடையென்பதே தெரியவில்லே. (இனி மூன்ருமடி) வெண்ணெய் என்கிற சொல் "விரித்தல் தொகுத்தல் வருஞ் செய்யுள் வேண்டுழி" என்ற இலக்கணப்படி வெணெய் என்ருகும்; இவர்களுக்கு வெணய் என்ருகியுள்ளது. ஒரு நான்கடியில் இத்தனே பிழையா? மணற்சோற்றில் கல் ஆராய்வது போதுமே.........ஒரு சுலோகம்; ''யத்யபி ந காபி ஹாநி: பரகீயாம் சரதி ராஸபே த்ராக்ஷாம், அநுசிதமிதமிதி மத்வா ஹாஹா ஹாஹேதி தூயதே சேத:'' இதன் கருத்து அறிவீர்களோ? கேண்மின். ஜனஸஞ்சாரமுள்ள ஒரு பாதையின் புறத்தில் ஒரு திராக்ஷைத்தோட்டம். திராக்ஷைக்கனிகள் பழுத்துத் தொங்குகின்றன. பிறர் உள்ளே புகவொண்ணுதபடி முள்வேலி போட்டிருந்தும் ஒரு கழுதை எப்படியோ உள்ளே குதித்து அக்கனிகளேத் தின்கிறது. தோட்டக் காரன் வீட்டிலுறங்குகிருன். இரவு பத்துமணியிருக்கும். நிலா நன்குகாய்கிறது. எவனேவொரு வழிப்போக்கன் கழுதை திராட்சைக் கனிகள் தின்பதைக்கண்டு பொருமல் கற்களே வீசியெறிந்து கழுதையை அதட்டுகிருன். அதைக்கண்ட மற்ெருரு வழிப்போக்கன் 'அண்ணே அண்ணே! தோட்டம் உன்னுடையதன்றே; திராட்சைக்கனிகளேக் கழுதை தின்பதனுல் உனக்கொரு நஷ்டமுமில்லேயே; நீ ஏதுக்கு அதை வெருட்டுகிருய்? என்ருள்; அதற்கு அவன் விடைகூறுகிற சுலோக மிது. [ராஸபே பரகீயாம் த்ராக்ஷாம் சரதி யத்யபி ந காபி ஹாநி: (மம)—எவனே வொருவனுடைய திராட்சையைக் கழுதை தின்பதனுல் எனக்குச் சிறிதும் நஷ்ட மில்லேதான்; ததாபி, [அநுசிதமிதமிதி மத்வா ஹாஹாஹா ஹேதி தூயதே சேத:] தமட்டங்காய்க்கும் திராட்சைக்கனிக்கும் வாசியறியாதவொரு கழுதை சிறந்த பொருளேப் பாழாக்கினுல் அந்தோ! என்மனம் சகிக்கவில்லேயே! என்ருன், அதுபோல, வடமொழியிலும் தென்மொழியிலும் பயிற்சியற்ற பண்டிதம்மந்யர் களேக் கொண்டு இவர்கள் பதிப்பிக்கும் சுவடிகளில் எத்தனே பிழைகள் மலிந்திருந் தாலும் நமக்கு யாதொரு நஷ்டமுமில்லேதான். சிறந்த பாஷையும், உயர்ந்த ஸ்ரீஸூக்திகளும் அநியாயமாய் உருமாறியொழிவது ஸஹிக்கமுடியாமையினுலேயே உலகுக்கு உபகாரமாகவே உணர்த்தினபடி. இப்படி தத்வங்காட்ட வேறு யாரே னும் முன் வந்ததுண்டோ?

அமாவாஸ்யை(யா) என்கிற சொல்லே அம்மாவாசை என்று எழுதி அச்சிடு மவர்களே எந்தத்திரளில் சேர்த்து நாம் பேசுவது? இவ்வபத்தச்சொல்லே மலரில் தேடவேண்டாம். முகப்பிலேயே காணலாம். அம்மாவுக்கு ஆசையான திதி என்று வியாக்கியானமும் ஸாதிப்பர்கள். ஸீதாபிராட்டி இராவணனே நோக்கி *இஹ ஸந்தோ ந வா ஸந்தி ஸதோ வா நாநுவர்த்தஸே* என்கிருள். (இஹ ஸந்தோ ந வாஸந்தி) என்பது ஏகவாக்யமன்று; வாக்யத்வயம். இஹ ஸந்தோ ந வா?—இவ்விலங்கையில் (உனக்கு உபதேசம் பண்ணக்கூடிய ஸத்துக்கள் இல்லேயா? என்று கேட்டது ஒரு வாக்யம். ஏனில்லே? [ஸந்தி] ஸ்ரீவிபீஷணும்வான் போல்வார் இல்லாமற்போகவில்லேயே, இருக்கிருர்களே. [ஸதோ வா நாநுவர்த் தஸே] எல்லாருமே க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர்களாயிருப்பர்களா? அநுவ்ருத்திப்ரஸந்நாசார்யர்களே அநுவர்த்தித்துத்தானே உய்யவேண்டும். ஸர்வஜ்ஞரான ஸ்ரீதேசிகனுங்கூட *நாண்பெரியோமல்லோம் நாம் நன்றுந்தீதும் நமக்குரைப்பாருளரென்று நாடுவோமே* என்றும் *ரங்காஸ்தாநே—வித்வத்

ஸேவாவிமலமநஸா வேங்கடேசேந* என்றும் ஸாதித்தபடியே நன்றுந்தீது முரைப்பாரை நாடி விமலமநஸ்கராகப் பெற்றமை அறியீர்களா? தற்காலம் ஸகல ஸ்ரீவைஷ்ணவ ஸௌபாக்யவஶாத் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. திருக்குடந்தை யாண்டவன் *கலையிலங்கு மொழியாளர்களில் தலைவராய் விளங்கியருளா நின்றூர். பம்பைக்கரையில் திருவடியின் சில பேச்சைக்கேட்டருளின பெருமாள் "இல்லாத வுலகத்தெங்குமீங்கிவனிசைகள்கூரக் கல்லாத கலையும் வேதக்கடலுமே யென்னுங் காட்சி, சொல்லாலே தோன்றிற்றன்றே ஆர்கொலிச்சொல்லில்வல்லான்? வில்லார் தோளிளையவீர! விரிஞ்சனே விடை வலனே? *என்று இலக்குமனேடு வியந்து பேசி மகிழ்கிறூர். உண்மையில் அத்தகைய கல்விச் சிறப்புவாய்ந்த நம் ஆண்டவனை யநுவர்த்தித்துக் குற்றமின்றிக்குணம் பெருக்கி வாழலாமே. இம்மலரில் அந்த மஹாஸ்வாமியின் திருக்கோலத்தை ஸேவித்து அபஶப்த ப்ருந்ததர்ஶந ஜநிததுக்கமெல்லாம் தீரப்பெற்றேன். (ப்ர—அண்ணா.)

## —முந்துறமுன்னம் முக்கியமான விஷயங்கள் இரண்டு—

ஆறேழுவருஷங்களுக்கு முன் தேசிகனுக்கு எழுநூருண்டு நிறைவுவிழா கொண்டாடினபோது, தேசிகன் அநுக்ரஹித்த ஸவ்யாக்யான தத்வார்த்தரத்நாவளீ அலப்யலாபமாகக் கிடைத்ததென்று மகிழ்ந்து அதை தேவநாகரிலிபியில் அச்சிடுவித்திருக்கிறீர்கள். த்விதீயப்ரஹ்மதந்த்ரஸ்வாமி பணித்ததென்று தேசிகவைபவ மொன்று ஸம்ஸ்கிருத ஆங்கிலமொழிபெயர்ப்புகளுடன் அச்சிடுவித்திருக்கிறீர்கள். இவற்றை ஸ்ரீரங்கம் கீழஉத்தரவீதியிலுள்ள பாடசாலையிலும் மயிலை தேசிக பவனத்திலும் மற்றும் பலவிடங்களிலும் கம்பல்ஸரி பாடபுஸ்தகங்களாகவும் வைத்து. பரீக்ஷை செய்து வெகுமதிகளும் அளித்து வருகிறீர்கள். தேசிகன் அநுக்ரஹித்த அந்தரத்நாவளி அபூர்ணம்; ஓலையேடு கிடைத்தவரையில் அச்சிட்டதாகத் தெரிவித்திருக்கிறீர்கள். அந்த ஸ்ரீகோசத்திலுள்ள விஷயங்களென்ன வென்றால் முன்பு எழுதின அர்த்தங்களில் அநுபபத்திகளை விளக்கி அநுதாபம் காட்டுதல் பெரும்பான்மையாகவுள்ளது. தேசிகனலல்லது வேறெருவரால் இயற்ற முடியாதவையாய், தத்வமுக்தாகலாப ஸமானங்களாயுள்ள சுலோகங்கள் கொண்ட அந்த ரத்னவளியைப்பற்றி ஏற்கனவே தெரிவித்தாயிற்று.

### —தேசிகபக்தர்கள் விடையிறுக்கவேணும்—

1. முந்துறமுன்னம் பிராட்டியின் உபாயத்வ விஷயத்தில் தேசிகன் திருவுள்ளம் இன்னதென்பதை ப்ராமாணிகர்கள் தெளியவேணும். ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ஸித்தோபாய சோதநாதிகாரத்தில் "இப்படி நாராயணபதத்தில் ஸித்தமான குணவிசேஷ ஸம்பந்தங்களடியாகப் பிறக்கும் கலக்கங்களுக்குப் பரிஹாரம் உதாஹரித்தோம்" என்கிறூர். கலக்கம் யாருக்கு உண்டாயிற்று? எவ்விதமான கலக்கம் அது? "பிறத்த கலக்கங்களுக்கு" என்னுதே "பிறக்கும் கலக்கங்களுக்கு" என்றதன் ஸ்வரஸார்த்தம் என்ன? சமிப்பித்தபடியொன்றை நிரூபித்தா

லும்போதும். அவ்விடத்திலேயே “இனி, ஸபத்நீகனுய்க் கொண்டு ஸர்வரக்ஷண யஜ்ஞதீக்ஷிதனை ஸர்வேச்வரனுக்கு ஸ்ரீமச் சப்தத்தில் சொல்லுகிற பத்நீஸம்பந்தத்தில் வரும் கலக்கங்களுக்கு திங்மாத்ரம் பரிஹாரம் சொல்லுகிறோம்” என்றுள்ளது. பத்நீஸம்பந்தத்தில் யாருக்கு எவ்விதமான கலக்கமுண்டாயிற்று? அந்த கலக்கம் க்ரந்தாரூடமா? ஸ்வாமி தாம்ஊஹித்ததா? தமக்கேயா? பரிஹாரம் சொல்லுகிறோமென்கிற ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றினரா? திங்மாத்ரம் என்கையாலே திக்கைக் காட்டினவளவேயா? கலக்கத்தையும் பரிஹாரத்தையும் பத் தெட்டு வரியில் மதுராந்தக பண்டிதர் விளக்கலாமே; உண்மையில் யாருக்குக் கலக்கமென்பது தெரியவேணும். ஆராய்ந்தால் தமக்கே கலக்கமென்பது தேறும்.

2. (அவ்விடத்திலேயே) “ஸ்ரீ ஸூக்த பாஷ்யத்தில் பெரியஜீயரும் அபேக்ஷிதார்த்தங்களெல்லாம் உபபாதித்தார்” என்கிறார் ஸ்வாமி தேசிகன். அபேக்ஷிதார்த்தங்கள் எவை? உபபாதித்த ப்ரகாரம் யாது? என்கிற கேள்வி நெடுநாளாகத் தொடர்ந்து வருகிறது. இதற்குக் கலியுகாவஸானத்திற்குள் விடை கிடைக்குமா?

3. ஸ்ரீஸூக்தத்தில் “லக்ஷ்மீம் அநபகாமிநீம்” என்றவிடத்தில் — [அநபகாமிநீம்] ந அபகச்சதீதி—அநபகாமிநீ; ந அபகமயதீதி அநபகாமிநீ” என்று இரண்டு விக்ரஹங்கள்காட்டி, “ஏதேந ச்ரிய: அவிநாபாவ: கடகத்வஞ்ச ஸித்த்யத:” என்று பாஷ்யம் காண்கிறது. அபேக்ஷிதார்த்தங்களெல்லாம் உபபாதித்தபடி இதுதானே. வேறொன்றுங் காண்கிறிலோம். இது ஸ்ரீவைஷ்ணவ ஸந்தான ஸர்வஸ்வமான அர்த்தமே. இதனால் இவர்க்கு என்ன லாபம்?

4. ஸ்ரீமத் இஞ்சிமேட்டழகிய சிங்கருடைய வியாக்கியானம் உலகில் பரவியிருக்கிறது. உண்மையில் இந்த ஸ்வாமி மஹாவ்யாபகர். பரமப்ராமாணிகர். வியாக்கியானம் செய்பவருடைய கடமை ஸந்தேஹ கந்தமற விசதீகரிக்க வேண்டியதல்லவா? இங்கு, ஸ்ரீஸூக்த பாஷ்யத்தில் அபேக்ஷிதார்த்தங்களெல்லாம் எப்படி உபபாதிக்கப்பட்டிருக்கின்றன வென்பதை யன்றோ அவரவர்கள் அறிய விரும்புவர்கள். அதையொன்றும் தொடாமலே பெரியஜீயரென்பவர் இன்னாரென்பதை யெழுதிவிட்டு நின்றால் என்ன அர்த்தம்?

5. ஸ்ரீஸூக்தபாஷ்யமிருக்கட்டும். “இப்படி மத்யஸ்தத்ருஷ்டியாலே ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச்செய்தே பற்றினது விடாதொழியில்” என்கிற திவ்யஸூக்தியன்றோ பெரிய தலைசுற்றல். தேசிகபக்த ப்ருந்தமெல்லாம் ஒன்று கூடினாலும், காலக்ஷேபஸ்வாமிகள் யாவரும் குழாங்கூடினாலும் இறையும் விடையிறுக்கமுடியாத விஷயமன்றோவிது!. நூறுதடவை எழுதினவார்த்தை இது.

“எம்பெருமானுக்குப்போலே பிராட்டிக்கும் மோக்ஷப்ரதத்வம் உண்டு. என்பதுதானே உங்கள் கொள்கை. தேசிகனுடைய சில்லரை ரஹஸ்யங்கள் தானே முன்னம் அவதரித்தவை. அவற்றில் ஒவ்வொரு விஷயமும் மிகத்தெளிவாகக் காட்டப்பட்டிருக்கிறது. ரஹஸ்ய ரத்னாவளியென்கிற ரஹஸ்யத்தில்,

" ஸ்ரீமானான நாராயணனொருவனுமே ஸர்வ ஜீவர்களுக்கும் தஞ்சம்....... ஸர்வ ஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரியபிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க்கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள் "

என்றருளிச் செய்து, இதை ரஹஸ்ய ரத்நாவளீஹ்ருதயமென்கிற அடுத்த ரஹஸ்யத்திலே தாமே விவரித்தருளுகிறார். உண்மையில் விவரணாபேக்ஷையேயில்லாதவிடமன்றோவிது. அப்படியிருந்தும் விவரித்தருளுகிறார். அது வீணான விவரணம் என்று நினைக்கவொண்ணாதபடி ஒரு விசேஷமும் அதில் வைத்திருக்கிறார். அதாவது, தஞ்சமாகிறாளென்பதற்கு ரக்ஷணஹேது வாகிறாள் என்று விவரணம் காட்டப்பட்டது. இங்கு ரக்ஷணஹேதுவாகிறாளென்பதில் ஹேது பதம் அஸ்தாநே ப்ரயுக்தமென்று அபிப்பிராயமா? ஸர்வேச்வரன் ரக்ஷண ஹேதுவாகிறான்" என்று எங்கேனும் யாரேனும் சொல்லியிருப்பதுண்டோ? இதைச் சிறு விஷயமென்பதா? பெருவிஷயமென்பதா? மதுராந்தக பண்டிதரே நிர்ணயிக்கவேணும். இப்படி நிஸ்ஸந்தேஹமாக அருளிச் செய்தவிடங்கள் ஒன்றிரண்டல்ல, பலபலவிடங்கள். பலபலவும் பலகால் காட்டியிருக்கிறேன். பாராத பண்டிதர்களுண்டோ? சதுச்ச்லோகியில் மூன்றாவது சுலோகத்தின் பாஷ்யத்தில் "மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணாம் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்" என்றருளிச் செய்திருப்பது ஒன்று போதுமே. 'எம்பெருமான்தான் மோக்ஷமளிப்பவன். அதனைப் பெறுவிப்பவளாகமட்டும் பிராட்டியிருக்கின்றாள்—என்பதுதானே இந்த ஸம்ஸ்க்ருத வாக்யத்தின் பொருள். ஸ்ரீலோகாசார்ய ஸித்தாந்தமும் ஸ்ரீதேசிக ஸித்தாந்தமும் இதுதானே. இதை ருஜுபுத்தியோடு இசைந்து கொண்டால் வாதமென்ன? விவாதமென்ன? அட்வகேட் ஸ்வாமிந்! சொல்லுமையா!

6. அர்த்தத்தில் ஸந்தேஹம் தோன்றக்கூடிய இடங்களில் போராடலாம்; நிஸ்ஸந்தேஹமாகவும் வெட்டொன்று துண்டிரண்டாகவும் அறுதியிட்டுவைத்தவிடங்களில் வீணாகப் போராடிக் கொண்டிருப்பது படித்தவர்களுக்குத் தகுமா? சிலவிடங்களில் பிராட்டிக்கு உபாயத்வம் சொல்லுவதாகத் தோன்றுவதால் அதை வைத்துக்கொண்டு மன்றாடுகிறோமென்னில், ஸத்யமாகச்சொல்லுகிறோம், இது வீண் மருள். அப்படியிருந்தால் பரஸ்பர வ்யாஹதபாஷியென்றுதான் முடிவு கட்டவேணும். வர்ஷசதமானாலும் வேறுகதியில்லை.

7. திருவுள்ளூரில் திவான்பஹதூர் T. T. ரங்காசாரியார் வேதாந்த தீபிகைக்கு ஆசிரியராயிருந்தபோது தேசிக ஸூக்திகளில் பரஸ்பரவிரோதத்தையெடுத்துக்காட்டி விளக்கினவர்களுக்கு பதிலெழுதுகையில் "ஸத்யாய மிதபாஷிணாம்" என்று மகுடமிட்டு, "மிகவிரிவாக க்ரந்தங்களெழுதினால் பரஸ்பர விரோதங்கள் வந்தேதீரும்; அது வராமலிருக்க முடியாது; தேசிகனைப்போல் விஸ்தாரமாக க்ரந்தங்களெழுதினவர்கள் கடல் சூழ்ந்த மண்ணுலகில் வேறுயாருமில்லை; ஆகவே இப்படிப்பட்ட விரோதங்கள் ஸம்பவிப்பது ஸஹஜமே; வித்வான்களுக்கு

இது ஸஹ்யமே" என்று விரிவாக எழுதிவெளியிட்டிருந்தார். அதைக்கண்ட மஹர்ஷிவாஸுதேவாசார்ய ஸ்வாமி அதைக் கண்டித்து விருத்தமாகக் காணுமிடங்களில் ப்ரக்ஷேபத்தை நிர்த்தாரணம் செய்யவேண்டுவதுதான் புத்திமான்களுடைய கடமை; ச்ருதப்ரகாசிகையைவிட விஸ்த்ருதமான க்ரந்தம் வேறொன்று கிடையாது; அதில் பூர்வாபர விரோதம் லவலேசமாவது காணமுடிகிறதா? இல்லையே. விபுலமாக எழுதிவிட்டதனால் பரஸ்பரவிரோதம் நேருவது ஸம்பாவிதமேயென்னில், அப்போது ஸ்வாமிக்கு நிஷ்க்ருஷ்டமான ஞானமில்லையென்றும் அக்கிலி பிக்கிலி ஞானமென்றும் தேறிவிடும்; ஆகவே விரோதம் காணுமிடங்களில் ப்ரக்ஷேப நிச்சயம் பண்ணுவதுதான் ப்ராமாணிக ப்ராஜ்ஞ க்ருத்யம்" என்றெழுதிவைத்திருக்கிறார். அப்போது அவர்களிருவர்க்கும் பிரளயமான விவாதம் நிகழ்ந்தது. முடிவாக இருவரும் சேர்ந்து தேசிக திவ்யஸூக்திகளில் பரஸ்பர விரோதம் மலிந்திருப்பதை நிலைநாட்டி வைத்தார்கள். ப்ராஸங்கிக விஷயமிது நிற்க.

'அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷணமநுக்ரஹே' என்கிறதேசிகனுடைய (ஜட்ஜ்மெண்டான) காரிகை கண்ணாடிபோல் விளங்கா நிற்கக் கண்டுவைத்தும் மருள்வதே!, பகற்கண்ட குழியிலே இரா விழுவதுண்டு. பகலிலேயே விழுவதுமுண்டோ? எம்பெருமானுடைய காரியம் இன்னது; பிராட்டியினுடைய காரியம் இன்னது என்று வகுத்து நிஸ்ஸந்தேஹமாக ஸ்வாமி கவிதார்க்கிக கண்டீரவம் உரைத்திருக்கச் செய்தேயும் வீணான பிடிவாதம் கொள்வது என்னே?. த்வயத்தில் பூர்வகண்டத்தில் பிராட்டிக்கு உபலக்ஷணத்வமா? விசேஷணத்வமா? என்று ஒரு விவாதத்தைக் கிளப்பிக்கொண்டு உபலக்ஷணத்வமென்று யாரோ சொல்லுவதாகவைத்து அதைக் கண்டித்து விசேஷணத்வமேயுக்தமென்று ஸ்தாபிப்பதாகக் காடுபாய்ந்த ஒரு (மிக வெறுக்கத்தக்கதும் அநந்விதமுமான) விசாரம் ரஹஸ்யத்ரயஸாரத்தில் பரந்திருக்கிறது இங்கு பிராட்டிக்கு விசேஷணத்வமில்லையென்று ஒரு ஆசார்யரும் எழுதிவைத்திருக்கவில்லை, நெஞ்சில் ஒரு மூலையிலும் அபிப்பிராயம் கொண்டிருக்கவுமில்லை. முமுக்ஷுப்படியில் த்வயப்ரகரணத்தில் "இப்போதிவளைச் சொல்லுகிறது புருஷகாரமாக" என்ற சூர்ணையின் வியாக்கியானத்திலே மணவாள மாமுனிகள் "புருஷகாரமாகவென்கையாலே உபாய வஸ்துவில் விசேஷணமாயிருக்கிற ஆகாரத்தையிட்டு இவளுக்கும் உபாயத்வத்தில் அந்வயம் சொல்லும்பக்ஷம் நிரஸ்தம்' என்றருளிச்செய்திருக்குமிடத்து விசேஷணத்வத்தைக் கண்டோக்தியாகவே கூறியிருப்பதைக் காணலாம். மாமுனிகளுக்கு முற்பட்ட ஆசாரியர்களும் ஒருவர் ஒரு நூலிலும் இந்த ப்ரஸங்கம் கொண்டதேயில்லை. இங்கு உபலக்ஷணத்வம் கொண்டாலும் விசேஷணத்வம் கொண்டாலும் வாசி சிறிதுமில்லை; உண்மையில் இந்த உபலக்ஷணத்வ விசேஷணத்வசர்ச்சையை ரஹஸ்யத்ரயஸாரத்தில் எடுத்துக்கொண்டது மிகமிக வெறுக்கத்தக்கது. மஹர்ஷி வாஸுதேவாசார்ய ஸ்வாமி "இது ப்ரக்ஷிப்தமென்பதில் ஸந்தேஹமேயில்லை" என்று எழுதியுள்ளார். ஸ்ரீமத்பரமஹம்ஸ இஞ்சிமேட்டழகியசிங்கரும் பர்யாயேண அதையே ஸ்தாபிக்கிறார். எங்ஙனே யென்னில்; ரஹஸ்யத்ரயஸாரத்திற்கு சரஸ்த்ரஜ்ஞர் யாரும்

வியாக்கியான மெழுதவில்லை. நவீன காலத்தில் சிறந்த சாஸ்த்ரஜ்ஞரான ஸ்ரீமத் பரமஹம்ஸ இஞ்சிமேட்டழகிய சிங்கர் திருப்பதி புரிசை ஸ்வாமியின் திருவடி பணிந்து தத்வார்த்தங்கள் கேட்டுணர்ந்தவராகையாலே நல்ல தெளிவுடன் எழுதியிருக்கிறார். அதாவது, விசேஷணத்வ உபலக்ஷணத்வங்களானவை ஜந்மாத்யதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் விவரித்திருப்பதாக எடுத்துக்காட்டிவிட்டு அதற்குமேல், இந்த உபலக்ஷணத்வத்தை ப்ரக்ருதத்தில் பிராட்டி விஷயத்திலே ஏக தேசிகளும் சொல்லுகிறார்களில்லை. சொல்லவும் முடியாது'' என்றெழுதியிருக்கிறார் அந்த ஸ்வாமியின் ஸ்ரீஸாரபோதினீ வியாக்கியானத்தின் இரண்டாம் ஸம்புடத்தில் 29-ஆம் பக்கத்தில் இப்படியெழுதியிருப்பதை அபலபிக்கமுடியாது. ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் இந்த விசாரத்தில்தான் ''த்ருடபூர்வச்ருதோ மூர்க்க:'' ''க்ரத்தஜ்ஞைரபஹாஸ்யம் தத்.........இத்யாதி பரமஸாத்விக திவ்ய ஸ்ரீஸூக்திகள் இடம் பெற்றிருக்கின்றன. இந்த ப்ரகரணத்துப் பங்க்திகளெல்லாம் சித்தப்ரம ஜநிதங்களென்று கூசாமல் கூறலாம். ''இப்படி மத்யஸ்தத்ருஷ்டியாலே ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச்செய்தே பற்றினது விடாதொழியில்'' என்றிருக்கிறதல்லவா ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில்; இது பிஷ்ட பேஷணமென்றுவிடவொண்ணாது. இதில் இரண்டு கேள்விகள்-மத்யஸ்தத்ருஷ்டியாலே தோற்றினதாகச் சொல்லப்படுகிற ப்ராமாணிகார்த்தங்கள் எவை? பற்றினது விடாமல் (அதாவது துராக்ரஹத்தாலே) பிடிவாதமாகச் சொல்லும் அர்த்தம் எது? என்று. ரஹஸ்யத்ரயஸாரத்தில் ''இப்படி மத்யஸ்த த்ருஷ்டியாலே'' என்பதற்குமுன்னே எடுத்துக்காட்டப்பட்டுள்ள பத்தெட்டு வசனங்கள் கனவிலே வாய்வெருவும்படியான வாக்யங்கள் போன்றவையே யொழிய வேறல்ல. ''வேரி மாருத பூமேலிருப்பாள் வினை தீர்க்குமே'' ''நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங்கொண்டு'' ''உன் திரு'' ''திருவுக்குந்திரு'' ''தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு'' இன்னும்பல வசனங்கள் இப்படிப் பாசுரங்களைக் காட்டியிருப்பது என்ன திருவுள்ளங்கொண்டோ? வேரிமாருத பூமேலிருப்பவள் வினை தீர்க்கமாட்டாளென்று யாரேனும் சொல்வாருண்டோ? நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளும் வேண்டாமென்று யாரேனும் சொல்லுவாருண்டோ? (உன் திருவன்று, என் திரு) என்பாருண்டோ? எம்பெருமான் திருவுக்குந்திருவாகிய செல்வனென்பதை மறுப்பாருண்டோ? உணர்வானது தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமென்பதை யாரேனும் அபலாபம் செய்வாருண்டோ? இவ்வருளிச் செயல்களோடு கூட ''வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு'' ''திருமாலே! நானுமுனக்குப் பழவடியேன்'' ''திருவின் வடிவொக்கும் தேவகி'' ''மலர்மேல் மங்கை மணாளன்'' ''மணாளன் மலர் மங்கைக்கும் மண்மடந்தைக்கும்'' இத்யாதி பாசுரங்களையும் அடுக்கிக்கொண்டே போகலாமே. ஐயோ! மறந்தபடியோ? அவற்றில் ரஸமில்லையென்று விட்டபடியோ? என்று கேட்கிறார்கள். (அலமேஷா பரித்ராதும் ராக்ஷஸ்யோ மஹதோ பயாத்) என்றும் (அலமேஷா பரித்ராதும் ராகவாத் ராக்ஷஸீ கணம்) என்றும் ஸ்ரீவால்மீகிபகவான் சரணாகதி ஸாரமான ஆதிகாவ்யத்திலே நிபந்தித்தான்'' என்கிறார். அருணாசலக் கவிராயரும் இப்படியெழுதியிருக்கிறாரே, அதை ஏன் எடுத்துக்காட்டவில்லையென்று கேட்கிறாரொருவர். இக்கேள்விக்குக்

கெல்லாம் ஸ்வாமி தேசிகனே நேராக எழுந்தருளித்தான் அநுக்ரஹிக்கவேண்டும். *ஜகத் ஸமஸதம் யதபாங்கஸம்ச்ரயம்* என்று ஆளவந்தார் ஸாதித்திருக்கிருராம். ராமராமா! க்ருஷ்ணக்ருஷ்ண! *அபாங்கா பூயாம்ஸோ யதுபரி பரம் ப்ரஹ்ம ததபூத்* என்று பட்டர் ஸாதித்திருப்பது நினைவுக்கு வரவில்லைபோலும். பிராட்டியின் கடாக்ஷங்கள் அதிகமாக விழுமிடம் பரப்ரஹ்மம் என்கிருர். (ஜகத் ஸமஸ்தம்) என்றதைவிட இது விசேஷமல்லவா? இதற்குமேல் (ச்ரேயோ நஹ்யரவிந்த லோசநமந: காந்தாப்ரஸாதாத் ருதே) என்கிற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியைக் காட்டியிருக்கிருர். இந்தச்லோகம் சதுச்ச்லோமியிலுள்ளது. அதன் பாஷ்யத்திலே அரவிந்த லோசநமந: காந்தா ப்ரஸாதம் எவ்வளவுக்கு உதவுகிறது என்பதை விமர்சிக்கப் புகுந்து எங்களாழ்வான் பட்டர் முதலான பூர்வாசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளைக் கொள்ளைகொள்ளையாக வெடுத்துக்காட்டி ''நீரிலே நெருப்புக்கிளருமாப்போலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தாலே சீற்றம் பிறந்தால் பொறுப்பது இவளுக்காக'' என்கிற பிள்ளை லோகாசார்ய ஸ்ரீஸூக்தியிலே கட்டகுட்யாம் ப்ரபாதமாயிற்று. அந்த ஸூக்திகளெல்லாம் தேசிகனுடையவையல்ல ப்ரக்ஷிப்தம் என்று கொண்டாலொழிய உய்யும் விரகில்லையந்தோ! *கட்டகுட்யாம் ப்ரபாதமென்கிற கதை சிலர்க்குத் தெரிந்திராது, அறிஞர் பக்கல் கேட்டு அவசியம் தெரிந்துகொள்ளவேணும். சர்ச்சையில் உள்ள ஒவ்வொரு விஷயத்திலும் இதுவே புகல்.

''ஸ்ரீவைகுண்ட கத்யத்திலே பிராட்டி தான் நித்யஸூரிகளையெல்லாம் ஆஜ்ஞாபிக்கிருளென்று பாஷ்யகாரர் ஸாதித்திருக்கிருராம்- இந்த ப்ரஹ்மாஸ்க்ரம் ஒன்றுபோதுமே. அதற்குமேல் கூரத்தாழ்வான் (ஸ்வஸ்திஸ்ரீர் திசதாத்) என்று ஸங்க்ரஹித்த அர்த்தத்தை மேலே (தேவி! த்வந்மஹிமாவதிர் ந ஹரிணு நாபித்வயாஜ்ஞாயதே) என்று விஸ்தரித்தாராம்; இது எப்படியிருக்கிறதென்ருல் (மந்த: கவியச: ப்ரார்த்தீ) என்று சுருக்கின அர்த்தத்தை பவபூதி (நமோவாகம் ப்ரசாஸ்மஹே) என்று விஸ்தரித்தார்; (முரளா மாருதோத்தூதம் அகமத் கைதகம் ரஜ:) என்று சுருக்கினதை (ப்ரணிபாத ப்ரதீகாரஸ் ஸம்ரம்ப:) என்றுதானே விவரித்தார்—என்னுமாபோலேயிரா நின்றது இதற்கெல்லாம் வாய்திறக்கவுண்டோவழி? ''பட்டரும் (ஐச்வர்யமக்ஷரகதிம் பரமம் பதம்வா விதீர்ய) என்ருர் என்கிறவொன்று எடுத்துக்கழிக்கவாவது யோக்யதையுள்ளது. ''தத்தே ரங்கீ நிஜமபி பதம் தேசிகாதேச காங்க்ஷீ'' என்று நியாஸதிலகத்திலே தாமே வழிகாட்டியிருப்பதை மறந்தாரே. ரஹஸ்யரத்னவலியில் இந்தப்ரமாணங்களையெல்லாம் ஏன் மறந்தாரோ? இன்னது சொல்லவேணும் இன்னது சொல்லுகிரேமென்று அஸ்திவாரமொன்று மின்றிக்கே—த்வாதசியன்று ஸூர்யக்ரஹணம் பிடித்தால் பாரணை முன்பா? தர்ப்பணம் முன்பா? என்று கேட்பதுய், இதைப்பற்றி முத்தண்ணு ஸஞ்சிகைகள் எழுதி நிர்ணயம் செய்தாச்சுது, இரண்டும் ஸமகாலத்திலே பண்ணும்படியாக நிர்ணய ஸிந்துவிலிருப்பதாக ப்ரமாணம் காட்டியாச்சுது என்று தம்பி பதில் சொல்லுவதும் போலேயன்ரே இந்த விஷயத்தின் போக்கிருப்பது; மோக்ஷப் பரதானத்திற்குப் பிராட்டி புருஷகாரக்ருத்யம் செய்வதுண்டா இல்லையா? என்பது ஒரே கேள்வி. இல்லையென்று வாய் திறக்கமுடியாது.

''புருஷகாரக்ருத்யஞ்செய்து'' என்று பன்முறையும் எழுதிவைத்திருக்கிருரே; அவள்தானே மோக்ஷங்கொடுக்க சக்தையாகில் கொடுக்கத்தடையென்ன? தண்ட தரனிடத்தில் மன்ருடித் திண்டாடி நிற்பது எதற்காக? என்று கேட்டால் ஆகாசம் பார்க்கவேண்டியது தவிர வேறுண்டோ?

ரஹஸ்யத்ராயஸாரத்தில் ''இதி மந்தைரிதம் ப்ரோக்தம்'' இத்யாதியான அஸ்தானதூஷணங்களைப்பற்றிக் கேண்மின். பிராட்டியின் உபாயத்வ சர்ச்சையில் ''ஸ்ரீமந்நாராயண சரணௌ என்றிருக்கவேணும்'' என்று ஒரு பெரியவர் ஸாதித்த தாகவைத்து, அதன்மேல் நிந்தைகளையும் பரிஹாஸங்களையும் சரமாரிபொழிகிருர் தேசிகன். ப்ரஸித்தர்களான ஆசாரியர்கள் யாரும் அப்படி ஆபாதனம்பண்ணி யிருக்கவில்லை. இங்கே தேசிகன் அர்த்த விசாரத்தில் புகாமல் சப்தசாஸ்த்ரப்படி இது தவருனப்ரயோகம் என்று கருதி ''இதி மந்தைரிதம் ப்ரோக்தம்'' ''க்ரந்த ஜ்ஞைரபஹாஸ்யம் தத'' என்று அஸ்தாநே அகாண்டே மருண்டு தடபுடல் பண்ணிவிட்டார். ஸ்ரீமந்நாராயண சரணௌ என்பது எப்படி தப்பான ப்ரயோக மாகும்? என்பதை நிரூபிக்கின்ற தேசிகன் ''ஸ்ரீமச்சப்த விரோதத:'' என்றும் ''பதிப்ராதாந்யதோந்வயாத்'' என்றும் இரண்டு ஹேதுக்களை யெழுதியிருக்கிருர். ச்ரிய: நாராயணஸ்யச சரணௌ என்று ப்ரயோகிக்மலாமேதவிர ஸ்ரீமந் நாராயண ஸ்ய சரணௌ என்று பிரயோகிக்கக்கூடாது. ஸீதையும் ராமனும் காட்டுக்குச் சென்ருர்கள் என்ற விவக்ஷையில் (ஸீதாராமௌஜக்மது:) என்னலாம். ஸீதயா ஸஹ ராமோ ஜக்மது:) என்ருே (ஸிதாயுக்தோ ராமோ ஜக்மது:) என்ருே சொன் ஞல் இது அபஹாஸ்யம் என்பது தேசிகன் கருத்து. இது ப்ரக்ருதத்தில் எப்படி பொருந்துமென்று பாருங்கள். ஸமாநாதிகரணப்ரயோகத்தின் ப்ரக்ரியை வேறு. வ்யதிகரணப்ரயோகத்தின் ப்ரக்ரியைவேறு ஸீதாயுக்தோ ராம: என்பது ஸமாநாதிகரணம் அங்கு (ஜகாம) என்றுதான் சொல்லவேணும். (ஜக்மது:) என்ருல் பரிஹஸியாமலிருக்க முடியாதுதான். அதுபோல (ஸ்ரீமாந் நாராயண: ரக்ஷத:) என்ருல் பரிஹஸிக்கவேண்டியதே; (ஸ்ரீமாந் நாராயண: சரண சதுஷ் டயவாந் என்ருே (ஸ்ரீமதோ நாராயணஸ்ய சரண சதுஷ்டயம்) என்ருே சொன் ஞல் இதை அபஹாஸ்யமென்பவரை உலகமெல்லாம் அபஹஸிக்குமே. ஸாராஸ் வாதிநீகாரர் (ஸாமாத்யோ ராஜா வதத:) இத்யாதிகளை இங்கு எடுத்துக்காட்டுகி ருரே இதற்கன்ருே அபஹஸிக்க வேணும். (குரோஸ் ஸதாரஸ்ய நியீட்யபாதௌ) என்பதை எடுத்துக்காட்டியிருப்பதும் அத்யந்த மபஹாஸ்யம்: இங்கு - பாதம், பாதௌ, பாதாந் என்று மூன்று வசனங்களையும் யதேஷ்டமாக ப்ரோயகிக்கலா மென்பதை அநாக்ராத சாஸ்த்ரகந்தரான ஸாராஸ்வாதிநீகாரர் எப்படித் தெரிந்து கொள்ள முடியும்? (சரணம் யதீந்த்ர சரணம் வ்வருணீமஹே) என்று யதிராஜ ஸப்ததியில் ஏகவசநப்ரயோகம் பண்ணியிருக்கையாலே பாஷ்யகாரருக்கு ஒரே திருவடிதானென்பர் போலும். ''ப்ரஹ்மே சாதிஸுரவ்ரஜஸ் ஸதயிதஸ் த்வத் தாஸதாஸீகண:'' என்ற ஆளவந்தார் ஸூக்தியை இவர்களெப்படி நிர்வஹிப் பர்களோ? ப்ரஹ்மேசாதி ஸுரவ்ரஜ: த்வத்தாஸகண: என்னலாம்; தாஸதாஸீ கண: என்று எப்படிச் சொன்ஞரென்று கேட்டால் (ஸநயித:) என்றிக்கிறதே

யென்பர்கள். உடனே தலைகுனிந்து தரையைக் கீறுவர்கள் என்று எழுதியிருக்கிறோம். இங்கு விஷயமென்னவென்றால்;ப்ரஹ்மேசாதி ஸுரவ்ரஜ: என்று மட்டும் சொல்லி த்வத்தாஸதாஸீகண: என்றால் பொருந்தாது; த்வத்தாஸகண: என்று தான் சொல்லவேணும்; இங்கு வெறும் ப்ரஹ்மேசாதிஸுரவ்ரஜத்தைச் சொல்லாமல் (ஸதயித:) என்று தேவபத்நிகளையுங் கூட்டிச் சொல்லியிருக்கையாலே அடைவே அந்வயித்துப் பொருந்தச் செய்யலாகிறது. இதேபோல் நாராயணனை மட்டும் சொல்லியிருந்தால் சரணனென்றிருக்க வேணுமென்றது அபஹாஸ்யமாகும். (ஸதயிதஸ்ஸுரவ்ரஜ:) என்றாற்போலே (ஸ்ரீமந்நாராயண) என்றிருக்கையாலே சரணனென்கிற பஹு வசனம் ஸுஸங்கதமேயாகுமென்று விளக்கி க்ரந்தஜ்ஞரபஹாஸ்ய மென்றதை த்ரிஜகதபஹாஸ்யமாக்கியிருக்கிறோம். இதில் இவர்கள் ஊமைகளே.

ஸ்ரீரங்கம் அட்வகேட் அவர்களை முன்னிட்டுக் கொண்டு ஸ்ரீ மதுராந்தக பண்டிதர் ஸன்னிதியில் விஜ்ஞாபிக்கிறேன். பண்டிதர்களென்றும் வித்வானகளென்றும் ப்ராஜ்ஞர்களென்றும் போற்றக் கூடியவர்கள் வம்புதும்புபொய்களையெழுதாமல் விவேகிகளுக்குப் பரம த்ருப்திகரமான விஷயங்களையெழுதவேணுமென்பதை தேவரீருக்கு அடியேன் உணர்த்தவேணுமோ? நம்மாழ்வார் எம்பெருமானைக் * கதிர்ஞான மூர்த்தியினாய்! * என விளித்து * உனக்கொன்று உணர்த்துவன் நான்* என்று அந்த ஸர்வஜ்ஞபகவானுக்கும் உணர்த்துகிறார். அதுபோல, தேவரீருக்கும் பலகால் உணர்த்தியிருக்கிறேன். எழுதின விஷயங்களையே எழுதிக் கொண்டுபோவதில் என்ன பயன்? இப்போதுதான் எழுதியிருக்கும் விஷயங்களில் சிலவற்றுக்காவது விடையிறுக்கவேண்டிய ஆவச்யகதை தேவரீருக்குத் தோன்றவில்லையா? ஸமீபத்தில் தேவப்பெருமாள் ஸன்னிதியில் நடந்த கோபுர ஜீர்ணோத்தாரண ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவத்தில் ஸன்னிதியில் ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டு எழுதினவை இந்த விஷயங்களெல்லாம். தென்கலையாரிலும் வடகலையாரிலும் எனக்கு ஆப்தர்களான பல ஸஹ்ருதயர்கள் வந்திருந்தபடியால் அவர்களில் பெரும்பாலர் இதை வாசித்துப் பார்த்தார்கள். தேவரீருடைய ஸ்ரீரங்க ஸ்ரீ விவேசனத்தையும் அனேகமாக வாசித்திருந்தவர்கள் அவர்கள். அப்போது பலர் ஏகமுகமாகக் கூறியது என்னவென்றால், ''இந்த பண்டிதர் ஸ்ரீரங்கத்தில் தானே வாழ்கிறார்; அங்கே வடகலையாரிலும் பலர் விவேகிகளாக இருக்கக்கூடுமே. இந்த அபசப்த புஞ்ஜங்களை அவர்கள் பார்த்து எப்படி ஸஹிததிருக்கிறார்கள்? கேட்ட விஷயங்களுக்கு விடையிறுக்காமல் ''காகஸ்ய கதி வா தந்தா''! மேஷஸ்யாண்டம் கியத்பலம்?'' என்றாற்போலே தலைகாலில்லாதபடி யெழுதுகிறாரே! ஸ்ரீ உ.வே. புத்தூர் வக்கீல் ஸ்வாமி யெழுதுகிற விஷயங்கள் எவ்வளவு ஸமஞ்ஜஸங்களா யிருக்கின்றன. அவருடைய லேகநசைலி இவர்க்கு ஏன் படியவில்லை? என்றார்கள். இதை யெல்லாம் தேவரீருடைய ஜாமாதாவும் நன்கறிவர்.

இதற்கெல்லாம் தேவரீர் ஆர்ஜவத்துடன் விடையிறுத்தாக வேணும். தேவரீருடைய பலபல சுஷ்கவாக்ஜாலங்களையும் உபேக்ஷியாமல் க்ரமேண எல்லாவற்றுக்கும் வஜ்ரகுடாரம் வந்தே தீரும்.

ஸ்ரீமதே வேதாந்தகுரவே நம:

(சலோ.) தேசிகபக்தம்மந்யை: ப்ரதிவக்தவ்யாந் ப்ரதாநதம விஷயாந்.
ஸம்க்ஷேபேண விகாமி ப்ரதிவிகதாதேஷ பண்டிதஸ் தூர்ணம்.

ஸம்ப்ரதாயத்தில் நவீனர்களால் விவாதாஸ்பதமாக்கப்பட்ட விஷயங்கள் பல பலவிருந்தாலும், ப்ரக்ஷேப உத்க்ஷேபசலுஷிதங்களான தேசிக திவ்யக்ரந்தங்களில் இதுகாறும் நாமெடுத்துக் காட்டிக் கேள்வி கேட்டிருக்கும் விஷயங்களை யாரும் மறந்திருக்கமாட்டார்கள். "வாஸுதேவக்ருஹம் த்வேகம் நப்லாவயதி ஸாகர:" என்றுப் போலே "மதீய க்ரந்தப்ருந்தம் து ப்ரலயேபி நலீயதே" என்று அடியேன் மார்பு தட்டிச் சொல்லிக்கொள்ளத் தடையில்லை. எனது நூல்களில் இதைப் பலகால் எழுதியே யிருக்கிறேன். த்வயார்த்த நிர்வாஹத்தில் யாரோ கலக்கங்கொண்டிருப்பதாகக் கலங்கினவாசிரியர் உபலக்ஷணத்வம் விசேஷணத்வமென்றுஅர்த்தமில்லாததொன்றை ப்ரஸங்கித்து, கீர்த்திமூர்த்தியான ஸ்ரீமத் இஞ்சிமேட்ட முகிய சிங்கரால் தமது ஸ்வபோதிநீ வியாக்கியானத்திலே ஒரு வித்வானும் வாய்திறக்க முடியாதபடி கண்டனமெழுதி வைக்கப்பெற்றூர். "இந்த உபலக்ஷணத்வத்தை யாரும் சொல்லவில்லை, சொல்லவும் முடியாது" என்று அந்த ஸ்வாமி எழுதிவைத்திருப்பதை யாரும் அபலபிக்கமுடியாதன்றே. இதனுல், ஆசிரியர் அஸ்தாநே கலங்கி ப்ரமித்து இருண்டு மருண்டு எழுதி வைத்தாரென்பது கல்வெட்டாகத் தேறவில்லையா?

"இது வாஸ்தவந்தான்; அந்த இஞ்சிமேட்டமுகிய சிங்கர்தாமே மேலே கோந்து தடவி ஒருவாறு ஒட்டவைத்திருக்கிறுரே" என்பீர். மெய்யே; *வ்ருச்சிக முகாத் பலாயமாநஸ்ய வ்யாக்ரமுகே பதநமன்றோ அது. பட்டர் அஷ்டச்லோகியில் (6) *ஈசாநாம் ஜகதாமதீசதயிதாம் நித்யாநபேதாம் ச்ரியம் ஸம்ச்ரித்ய, ஆச்ரயணோசிதாகிலகுணஸ்ய அங்க்ரீ ஹரேராச்ரயே. இஷ்டோபாயதயா; ச்ரியா ச ஸஹிதாயாத்மேச்வராயார்த்தயே கர்த்தும் தாஸ்யமசேஷமப்ரதிஹதம் நித்யம் த்வஹம் நிர்மம:* என்றும், அதிலேயே (5)*அத மிதுநபரம் ப்ராப்யம்* என்றும் கல்வெட்டாக அருளிச்செய்தவற்றுக்குக் கண்டனமாகவன்றோ தலைக்கட்டிற்று. இந்த வொரு விஷயத்தைப் பற்றி ஆர அமர எழுதினுல் பிறகுநான் லேகநஸம்ந்யாஸம்பண்ணிவிட்டுமதுராந்தகர் வாசலிலே விழுந்துகிடக்கிறேனென்று எத்தனை தடவை யெழுதி யிருக்கிறேன் தெரியுமா? இந்த சர்ச்சையில் புதிதாகவந்துபுகுந்த K. N. S. அட்வகேட் 'இதுகாறும் நானறியேனே' என்றுல் இப்போதறிந்துகொண்டு செய்யவேண்டுவதைச் செய்யட்டும். இப்படி ஒரு விஷயமா? "கரடிக்குப் பிடித்தவிடமெல்லாம் மயிர்" என்று எழுதியிருக்கிறேனே.மதுராந்தகருடையகண்ணில் இதெல்லாம்படுவதில்லை: படுவதேயில்லை யாது; "நான்வடகலை; என் கீழண்டை வீட்டுக்காரர் வடகலை, என் மேலண்டை வீட்டுக்காரர் வடகலை, தென்னண்டை வீட்டுக்காரர் வடகலை; வடவண்டை வீட்டுக்காரர் வடகலை, போஸ்டு மேஸ்டர் வடகலை, ஸ்டேஷன் மேஸ்டர் வடகலை, தபால்காரன் வடகலை, ஸ்டாம்பு வெண்டர் வடகலை, ஸப்ரிஜிஸ்ட்ரார் நேற்றுவரை வடகலையாயிருந்தார்; அம்மாமண்டபம் வடகலை, அய்யாமண்டபம் வடகலை—என்று அடுக்கிக்கொண்டு போகிறுர். தாராளமாகப் போகட்டுமே.

நம்மாழ்வார், திருவாய்மொழியில் *நெற்றியுள் நின்றென்னையாளும் நிரை மலர்ப்பாதங்கள் சூடிக் கற்றைத்துழாய் முடிக்கோலக் கண்ணபிரானைத் தொழுவார்.

(அவர்கள் யாவர்? என்றால்?) •ஒற்றைப் பிறை யணிந்தானும் நான்முகனுமிந்திரனும் மற்றையமரருமெல்லாம்• என்றார். ஆழ்வாருடைய திருநெற்றியில்—ஏகபர்தாகவர் புண்ட்ரமில்லை; [பாதங்கள்] நாஸிகாமூலே கமலமுகுளம் விளங்காத பாதங்களல்ல; [நிரைமலர்ப் பாதங்கள்] மேலே •வீற்றிருந்தேழுலகில் •தண்டாமரை சுமக்கும் பாதப் பெருமானை.]......இப்படிப்பட்ட நிரைமலர்ப் பாதங்கள் ஈசன் நான்முகனிந்திரன் முதலாத்தெய்வங்கள் நெற்றியில் திகழ்கில றனவென்கிறீர்; மதுராந்தகரே! சென்றுபார்ப்பீரா? பிள்ளைப்பெருமாளையங்கார் •நீணாகணைப் பள்ளியில் திருவரங்கத்து நெடிது முதுயிலும்பிரான் நெற்றிக்கண்ணனவனைவாசவனை நான்முகனை நிமிருமிருசுடரை முதலாச் சேணுடர் யாவரையுமடிமைகொண்டரெவர் சிரத்திற் பொறித்துவிட்ட திருச்சக்கரப் பொறியிலாததொரு கடவுளைத் தேடியினிமுன்விடுவனே• (சம்பிரதம்) என்று பாடினார்; திருச்சக்கரப் பொறியிலாததொரு கடவுளைத் தேடி முன்விடலாம். குருகூர்ச்சடகோபன் நெற்றியுள் நின்றாளும் நிரைமலர்ப் பாதங்கள் சூடாத கடவுளரைத் தேடிப்பிடிக்க முடியாதென்பது கல்வெட்டு. அட்வகேட்டும் மதுராந்தகரும் என்ன சொல்வார்களென்னில்; மேலே காட்டிய பாசுரங்களுக்கு இப்படி வியாக்கியானமிருக்கிறதா? என்று கேட்டுக்கொண்டு போதைப் போக்கலாமத்தனை; 1802 ஆம் வருடம் முதலாக......என்று இந்த அட்வகேட் ஒரு வருடங் கண்டுபிடித்துக் காட்டியிருக்கிறாரே; அந்த வருடத்து விசேஷங்களையும், அவ்வாண்டு தொடங்கி ஆங்காங்கு நிகழும் விசேஷங்களையும் செவ்வனே அறியப் பெற்றீராகில் •ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ:• என்று வாய்வெருவியே தீருவீர். •திண்ண நாமறியச் சொன்னோம்.•

......மூதலான்னிகம் முற்றிற்று.

## ஆனந்த விஜ்ஞாபனம்

9—4—78 இரவு முதலாக 12—4—78 இரவு அளவாகத் தேவப்பெருமாள் ஸந்நிதியில் நடைபெற்ற ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவத்தை ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமதஹோபில மஹாஸ்வாமி ஸ்ரீ அழகியசிங்கர் ஸ்வாமி அற்புதமாக நடத்தி வைத்த பெருமையை நிச்சலும் நினைத்துக்கொண்டு தொலைவின்பத்திறதியில் நிற்கிறோம். ... ... ... ...

**நித்யஸ்ரீர் நித்யமங்களம்.**

